ஸ்ரீ ராமாநுஜன் 149
சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 13 | 1961ஆு மேமீ பிலவஆு வைகாசிமீ | ஸஞ்சிகை 5

# திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம்-39

நண்ணாது மாலடியை நானிலத்தே வல்வினையால் *
எண்ணாராத் துன்பமுறு மிவ்வுயிர்கள்—தண்ணிமையைக்
கண்டிருக்க மாட்டாமல் கண்கலங்கு மாறனருள் *
உண்டுநமக் குற்றதுணை யொன்று. (39)

| | | | |
|---|---|---|---|
| மால் அடியை | எம்பெருமானது திருவடியை | கண்டு | கடாக்ஷித்து |
| நண்ணாது | கிட்டாமல் | இருக்கமாட்டாமல் | அறியிருக்க முடியாமல் |
| நால் நிலத்தே | இப்பூமியிலே | கண் கலங்கும் | திருவுள்ளம் கலங்கப்பெற்ற |
| வல் வினையால் | கொடிய பாவங்களினால் | மாறன் | ஆழ்வாருடைய |
| எண் ஆரா துன்பம உறும் இ உயிர்கள் | அளவற்ற துக்கங்களை அனுபவிக்கிற இவ்வாத்மாக்களுடைய | அருள் | கருணையானது |
| | | நமக்கு | நம்போல்வார்க்கு |
| | | உற்ற துணை ஒன்று உண்டு | அடுத்தவொரு துணையாக இராநின்றது. |
| தண்ணிமையை | நிஹீனத்தன்மையை | | |

ஆழ்வார் இந்த லோகஸ்வபாவங்களிலே கண் செலுத்தி ஆராய்ந்து பார்த்தவாறே ஒவ்வொருவரும் எம்பெருமான் பக்கலிலே விமுகராய்ப் பாவமே செய்து பாவிகளாய் அளவு கடந்த துக்கங்களை அநுபவித்துக்கொண்டிருக்கிறபடியைக் கண்டு இவர்களின் நடுவே தாம் இருக்கமாட்டாமலும் அவர்கள் படும்பாட்டைக் கண்டு ஸஹித்திருக்கமாட்டாமலும் *நண்ணாதார் பதிகத்தில் கதறினார்; அப்படிப்பட்ட ஆழ்வாருடைய அருளே நமக்குத் தஞ்சம் என்றதாயிற்று. [எண்ணார] எண்ண + ஆரா என்றும் பிரிக்கலாம்; எண்ணமுடியாத வென்கை.

* ஏருளுமிறையோனுமென்கிற கீழ்த்திருவாய்மொழியில், உடம்பு வேண்டா, உயிர் வேண்டா, அதுவேண்டா; இது வேண்டா என்று ஆத்மாத்மீயங்களை யெல்லாம் வெறுத்து உதறித்தள்ளப் பார்த்தார்; தள்ளினால் தள்ளுண்டுபோமவையோ அவை? பேறு பெறுவதற்கு எப்படி அவன்கை பார்த்திருக்கவேணுமோ, அப்படியே முடிகைக்கும் அவன் கைபார்த்திருக்க வேண்டுகையாலே 'எம்பெருமானே! என்னை நீதானே முடித்திடாய்' என்கிறார். ஆழ்வாருடைய ஆர்த்தி பேச்சுக்கு நிலமல்லாதபடி பெருகினமை இத்திருவாய்மொழியிலே விளங்கா நின்றது.

ஆழ்வாருடைய ஆர்த்திக்கு மூன்று ஹேதுக்களுண்டு; எம்பெருமானோடு கலவி பெறாமல் பிரிந்து படும் ஆர்த்தி ஒன்று; ஸம்ஸாரிகளோடு ஸஹவாஸம் பொறுக்கவொண்ணா

ததாய் அத்தாலே வரும் ஆர்த்தி ஒன்று; இந்திரியங்கள் விஷயங்களிலே கொண்டுபோய் மூட்டி அநர்த்தங்களை விளைக்கையாலே அத்தாலே வரும் ஆர்த்தி ஒன்று. இவற்றுள் எம்பெருமானுடைய பிரிவினால் வந்த ஆர்த்தி கீழ்த்திருவாய்மொழியிலே கண்டது. இந்திரியங்களாலாகும் ஆர்த்தி மேலே * உண்ணிலாவிய வைவரால் * என்கிற திருவாய்மொழியிலே காணலாகும். ஸம்ஸாரிகளினிடையே ஸஹவாஸம் பொறுக்கவொண்ணாமையாலாகும் ஆர்த்தி இத்திருவாய்மொழியில் காண்பதாகும்.

எம்பெருமானைக் காணப் பெறுவிடினும், எம்பெருமானைக் காணப்பெறாத பாவிகளின் இடையிலே இருப்பாவது இல்லாமலிருக்குமாகில் ஒருவாறு ஆறியிருக்கலாம். அப்படியல்லாமல் உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தினிடையிலே மிக விபரீதமான லோக யாத்ரைகளைக் கண்ணாலே கண்டு கொண்டு இருப்பதென்றால் இது ஆழ்வார்க்கு எங்ஙனே ஸஹிக்கத்தக்கதாகும்?

ஸ்ரீ விபீஷணாழ்வான் "இராமபிரானது கோஷ்டியிலே நமக்கு ப்ரவேசம் கிடைக்கட்டும்; கிடைக்காமற்போகட்டும்; மஹாபாபியான இராவணனுடைய கண்வட்டத்தில் நின்றும் எழுந்து அப்பால் சென்றால் போதும்" என்று துணிந்து * உத்பபாத கதாபாணி:சதுர்ப்பிஸ் ஸஹ ராக்ஷஸை: * என்கிறபடியே சடக்கென எழுந்து சென்றதுபோல, ஆழ்வாரும் இவ்விருள்தருமா ஞாலத்தில் நின்றும் சடக்கென வெழுந்து செல்லத் துணிவுகொண்டாலும், அது தம்முடைய இஷ்டப்படி நிறைவேறுவதன்றே; எம்பெருமான் திருவுள்ளத்தினாலாக வேண்டியதன்றோ இது. ஆகையாலே "உனகழற்கே வரும்பரிசு பணிகண்டாய் சாமாறே" என்றும் "கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே" என்றும் "கோட்டையினிற் கழித்தென்னை உன் கொழுஞ்சோதியுயரத்துக் கூட்டரிய திருவடிக்கண் எஞ்ஞான்று கூட்டுதியே" என்றும் அளவற்ற ஆர்த்தி தோற்றப் பேசுகிறார். .... .... *

---

ஸ்ரீ:

## கல்லக்குறிச்சியில் ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாள் ப்ரம்மோத்ஸவம்.

கல்லக்குறிச்சி தென்னார்காடு மாவட்டத்தில் நடுநாட்டுப்பாடல் ஸ்தலமாகிய திருக்கோவலூருக்கண்மையில் உள்ளது. நந்தன வருஷத்தில் கோபுர மண்டபாதிகளெல்லாம் அழகாக திருப்பப்பட்டு திருக்கோவலூர் தேசளீசன் எழுந்தருளி ஸம்ப்ரோக்ஷணை ஆயிற்று. இவ்வாண்டு சித்ரா பௌர்ணமி யன்று ரதோத்ஸவத்துடன் பத்து நாளைய ப்ரம்மோத்ஸவம் 21—4—61 முதல் 2—5—61 வரை நடந்தது. ஸம்ப்ரோக்ஷணையை விலக்ஷணமாக நடத்தி வைத்த திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர் மடாதிபதியும், காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியும், ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்ரங்களிலிருந்து அத்யாபகர்களும், வேதபாராயணக் காரர்களும் வந்திருந்து உத்ஸவத்தை நடத்திவைத்தனர். இவ்வாண்டுதான் முதல் ப்ரம்மோத்ஸவம். வைதிக கார்யங்களான வேதபாராயணங்களும் திவ்யப்ரபந்த பாராயணங்களும், ஹோமங்களும், இன்னிசை வாத்யங்களும் சிறப்புடன் நடந்ததுபோல லௌகிக கார்யங்களான மின்சார விளக்குகளும், நையாண்டிமேளம் முதலிய வாத்யங்களும், வாண வேடிக்கைகளும் நடைபெற்றன. அபரிமிதமான ஜனத்திரள் கூடி உத்ஸவம் ப்ரகாசித்தது. ஏழு மஹோபந்யாஸங்கள் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியாலும், திருக்கோவலூர் ஜீயர் மடாதிபதியாலும், ஸ்ரீவில்லிபுத்தூர் ராமானுஜாசார் ஸ்வாமியாலும், சித்ரகூடம் வெங்கடாசார்ய ஸ்வாமியாலும், பெருகவாழ்ந்தான் ஸ்ரீனிவாஸ அய்யங்கார் ஸ்வாமியாலும் நடைபெற்றன. திருவண்ணாமலை ஸ்ரீமதி. ஹைமவதி தியாகராஜன் அவர்கள் விடாயாற்றி யன்று ஸங்கீத காலட்சேபம் செய்தார்கள். கல்லக்குறிச்சி வக்கீல் தாதாச்சாரியார்

உடல் நலங்குன்றி வயது முதிர்ச்சியாயும் இருந்துங்கூட ப்ரம்மோத்ஸவ லௌகிக வைதிக கார்யங்களை தர்மகர்த்தா வீ. கேசவலு நாயுடு வுடன் நடத்திவந்தார். ஸந்நிதிக்கு திருத்தேர் புதிதாக ரூ. 25,000/– செலவில் தர்மகர்த்தாவினுல் தம் பொருளைக் கொண்டு வழங்கப் பட்டது. கோயிலின் பல கார்யங்களையும் அவரே தன் பொருளைக் கொண்டு நடத்தி வந்திருக்கிறார். இவர் ஸ்ரீதரன் பஸ் கம்பெனி முதலாளி. எல்லா வைஷ்ணவர்களும் இவரை வைஷ்ணவரத்னம் எனப் போற்றுகின்றனர். திருக்கோவலூர் யானை அலங்காரமாக உத்ஸவத்தில் பவனி வந்தது. இவ்வாண்டைப் போலும், அதிகரித்தும், ஆஸ்திகர்களும் தர்மகர்த்தாவும் இனியும் ப்ரம்மோத்ஸவங்களை மக்கள் நலம்பெற நடத்துவாராக.

கல்லக்குறிச்சி,
4—5—61.

T. GOVINDAN, B. Sc., B. T.,
ASSISTANT.
Board High School, Kallakurichi. (S. A.)

---

## ஸ்ரீமத் உ. வே. டாக்டர் K. S. க்ருஷ்ணன் ஸ்வாமியின் சென்னை விஜயம்

நியூடெல்லியில் வாழும் ஸ்ரீமத். டாக்டர், ஸர். K. S. கிருஷ்ணன் F. R. S. அவர்களை இவ்வுலகில் அறியாதாரில்லை. மாபெரும் விஞ்ஞானிகளின் கோஷ்டியிலும் மஹாமேதாவிகளின் திரளிலும் முதன்மைபெற்று விளங்கும் இப்பெரியார் இரண்டு மாதங்களுக்கு முன்பு விசேஷ மான ராஜஸன்மானத்தைப் பெற்றிருக்கிறுரென்பதை உலகமறியும். "பத்மபூஷண" முத லான மற்றும்பல விருதுகளையும் பெற்று விளங்குபவர் இப்பெரியார். லௌகிக விஞ்ஞா னத்தில் அத்விதீயராக இவர் விளங்குவதுபோலவே வைதிக ஞானத்திலும் நிகரற்று விளங்கு கின்றுர். நம்முடைய பூருவாசாரியர்களின் ஸத்ஸம்பிரதாய திவ்யக்ரந்தங்களெல்லாவற்றி லும் இப்பெரியார் விலக்ஷணமான அவகாஹனமும் உபஸ்திதியும் பெற்றவர். கேட்பார் மனமுருகப் பேசவல்ல ஆற்றல் இவர்க்கு அஸாதாரணமானது.

சென்ற ஏப்ரல்மாத முடிவில் இப்பெரியார் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார். ஸ்ரீவில்லிபுத்தூர் ப்ராந்தத்தில் இவர்க்கு ஜன்மபூமியாதலால் மதுரை பக்கமும் இரண்டு மூன்று நாள் சென்றிருந்து திருவல்லிக்கேணிக்குத்திரும்பினர். அவ்விடத்திலுள்ள மஹான் களின் வேண்டுகோளுக்கிணங்கி 2—5—61 தேதி மாலை 6-30 மணிக்கு அங்கே வானமாமலை மடத்தில் "பகவத்விஷயம்" என்பது பற்றி இப்பெரியாருடைய சொற்பொழிவு ஒருமணி காலம் நடந்தது. சென்னை அறநிலையப்பாதுகாப்பாளரின் முயற்சியினுல் இந்த ஸபை நடை பெற்றது. பரிகணிதர்களான ச்ரோதாக்கள் விசேஷமாகக் குழுமியிருந்தார்கள்.

இப்பெரியார் உபந்யஸிக்க எடுத்துக்கொண்ட ஸப்ஜக்ட் பகவத் விஷயமென்பது. நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியின் பாசுரங்களைக்கொண்டு பகவத்குணனுபவம் செய்வதை பகவத்விஷயானுபவமென்று ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர் வழங்குவர். திருவாய்மொழியில் ஏதாவதொரு பாசுரத்தை யெடுத்துக்கொண்டு அதற்குப் பதவுரை கூறு வதும் முன்னேருரைகளிற்கண்ட விசேஷார்த்தங்களைக் கூறுவதும் ஆங்காங்கு பகவத்விஷய உபந்யாஸகர்களின் இயல்பு. இப்பெரியாருடைய தோரணை அத்தகைத்தன்று. பகவத் கல்யாணகுணங்களில் ஏதேனுமொரு குணத்தைப்பற்றிக்கொண்டு பேசத் தொடங்குவர். தம் நினைவின்றியே ஆழ்வார்களின் பலபல சந்தைகளிலும் பரந்து செல்வர். இதிஹாஸ புராணங்களும் உபநிஷத் வாக்யங்களும் உரிய விடங்களில் என்னைச்சொல் என்னைக்கொள்

ளென்று தன்னடையே வந்து புகும். பகவத்விஷயாதிகாரிகள் என்று ப்ரஸித்திபெற்ற வித்வான்களாலும் அனுகரிக்கமுடியாதது இப்பெரியாருடைய சொற்பொழிவு நடை. குறிப்பிட்ட ஒரு விஷயத்தையே பற்றிப் பேசுவதென்பது இப்பெரியாரிடமில்லை. அத்தகைய வரம்புக்கு உட்பட்டுப் பேசவல்லவருமல்லரிவர். ப்ரக்ருத உபந்யாஸ தினத்தன்று 'உபாயத்வம்' என்கிற வொரு பகவத்குணத்தைப் பற்றிக்கொண்டு பேசத்தொடங்கினார். அதில் சொற்போக்கில் வந்துபுகுந்த பகவத் குணங்கள் பலபல. பேச்சில் இவருடைய ஸொந்த வாக்குக்கள் சிற்சிலவே யிருக்கும். பெரும்பாலும் பூருவாசாரியர்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகளே இவருடைய வார்த்தையாகப் பெருகும். பூர்வாசார்ய திவ்யக்ரந்தங்களில் விசேஷ பரிசயம் பெற்றவர்களுக்கே இவருடைய சொற்பொழிவு மிகமிக வினிதாகும்.

இப்பெரியார் 3—5—61ல் புறப்பட்டு டெல்லிக்கு எழுந்தருளியாயிற்று. மறுபடியும் மேமாதத்தின் முடிவில் சென்னைக்கு விஜயம் செய்ய நேருமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## தேவப்பெருமாள் ப்ரஹ்மோத்ஸவம்

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாளுடைய பிரம்மோத்ஸவம் வையங்கண்ட வைகாசித் திருநாளென்று உலகமெங்கும் பிரசித்திபெற்றது. அது நிகழும் மேமீ 26உ (வைகாசிமீ 13உ) வெள்ளிக்கிழமையன்று துவஜாரோஹணமாகி ஜூன்மீ 3உ சனிக்கிழமை அவபிரதமாகும். 28-5-61 ஞாயிற்றுக்கிழமை கருடசேவை. 1-6-61 வியாழக்கிழமை திருத்தேர். ஊரில் தாபம் அதிகம். ஆனாலும் வருணபகவான் இடையிடையே சிறிது கண் திறக்கிறார். ஸேவார்த்தி ஜனங்கள் ஸௌக்கியமாக உத்ஸவாநுபவம் செய்ய அனுகூலமுண்டு.

## அறிவிற்சிறந்த பெரியார்க்கு அறிவிப்பு

உலகில் பத்திரிகைகளை வாசிப்பவர்களின் ருசி ஒரேவிதமாக இராது, பலவகைப் பட்டிருக்கும். தேச விருத்தாந்தங்களைத் தெரிவிக்கும் நியூஸ்பேபர்களை வாசிக்கவே சிலர்க்குக் குதூஹலம். கட்டுக்கதைகள் மிக்க பத்திரிகைகளைப் படிக்கவே பலர்க்கு அபிநிவேசம். அபூர்வமான ஆராய்ச்சிகள் மலிந்த பத்ரிகைகளையநுபவிக்கப் பலர்க்கு ஆசை. வாத விவாதங்கள் கொண்ட வியாஸங்களை வாசிக்க அநேகர்க்கு ஆவல். "லோகோ பிந்நருசி:" என்றபடி இப்படி ருசிபேதமுடையார் உலகில் இருப்பது வியப்பன்று. இதையறிந்த நாம் நமது ஸ்ரீராமாநுஜனில் அவரவர்களுக்கு ஒருங்கே உதவக்கூடிய வியாஸங்களை உபஹரித்து வருகிறோம். சென்ற விதழிலும் இவ்விதழிலும் வாதவிவாத வியாஸங்கள் அதிகமாகத்தலைகாட்டி யிருப்பதனால் ருசிபேதமுடைய சிலர்க்கு இதில் விசேஷமாக ரஸாநுபவம் தோன்றுமலிருக்கக்கூடும். அன்னவர்களுக்கு நாம் தெரிவிப்பதாவது, வாதவிவாத விஷயமானாலுங்கூட அவரவர்கள் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டிய அபூர்வமான ஸத்விஷயங்களையே கொண்டிருக்கின்ற இந்த வியாஸங்களை ரஸிக விவேகிகள் வாசிக்க இழக்கலாகாது. "கையில் எது கிடைத்தாலும் அதை ஓரெழுத்து விடாமல் வாசித்து முடிப்பது" என்று பலர் விரதம் கொண்டிருப்பதுண்டு. அது மிக நன்று. அந்த ரீதியில் உத்ஸாஹத்தோடு பூர்த்தியாக வாசித்துப் பாருங்கள். வெகு ஆனந்தமே உண்டாகுமென்பதில் ஐயமில்லை. இப்போது நூறு அர்த்த விசேஷங்கள் வெளிவரத் தொடங்குகின்றது. ஒவ்வொன்றுக்கும் ஹெட்டிங்கு கொடுத்திருக்கிறோம். அதுவே உங்களைப் பூர்த்தியாக வாசிக்கச்செய்யும்.

இதெல்லாம் D. T. தாதாசாரிய ரென்பவரால் விளையும் லோகோபகாரங்கள். நம்முடைய அம்ருதலஹரீ பத்ரிகையிலும் இதையொட்டி அநேக விஷயங்கள் க்ரமேண வெளியிடப்படுகின்றன. 15—5—61 ல் வெளிவந்த லஹரியைத் தருவித்துப் பார்க்க.

---

# ஸ்ரீராமாநுஜன் 148 அநுபந்தம்.

ஸ்ரீராமாநுஜன் ஆசிரியருடைய எழுபதாண்டு நிறைவு மஹோத்ஸவம் 18-3-61 முதல் 4-4-61 வரை வழக்கப்படி க்ருஷ்ண யஜுர் வேத சுக்லயஜுர்வேத ஸாமவேத பாராயணங்களுடனும் திவ்ய ப்ரபந்த ஸேவையுடனும் ஸ்தோத்ர ரஹஸ்யாநுஸந்தானங்களுடனும் வித்வத் பரிஷத்துக்களுடனும் விசேஷ வைபவமாக நடந்தேறியது. இப்பதினெட்டு நாட்களிலும் தினப்படி பின்மாலையிலும் மாலையிலும் க்ரம பாராயண திருவீதி ப்ரதக்ஷிண கோஷ்டி நடைபெற்று வந்தது. 4-4-61 திருவிசாகத்தன்று மாலை திருவீதி ஸ்தோத்ர பாடகோஷ்டியின் திருவுருவப்படம் பின்புறத்தில் ஸேவிக்கத்தக்கது.

கோஷ்டியினிடையில் ஸேவை ஸாதித்தருளாநின்ற ஜீயர்ஸ்வாமி ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீகாஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடாதிபதிகளாக அபிஷிக்தர். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீமத். முடும்பி. ராமாநுஜய்யங்கார் ஸ்வாமியென்கிற திருநாம முடையவர். திருநாராயண புரத்திற்கு ஸந்நிஹிதமான 'மண்டயா' என்னுமூரில் எழுந்தருளியிருந்து ஸம்பிரதாய க்ரந்த ப்ரவசனம்செய்து கொண்டிருந்தவர். சென்ற ஐப்பசி மாதத்தில் காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி விரக்தியினால் ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு நம்பிள்ளை ஸன்னிதியிலேயே நாலைந்துமாதம் எழுந்தருளியிருந்தார். மேலேசொன்ன அழகிய மணவாள ராமாநுஜஜீயர் மடம் சில வருஷங்களாக சூந்யமாயிருந்தபடியால் இந்த ஸ்வாமியை அங்கு மடாதிபதியாக எழுந்தருளச்செய்வது நன்று என்றுகொண்ட காஞ்சீ தென்னாசார்ய ஸ்வாமிகளின் முயற்சியால் இந்த ஸ்வாமி அந்த ஸ்தானத்தில் நேற்று பங்குனி மாதத்தில் (23-3-61) அபிஷிக்தரானார். பிறகு சித்திரை மாதத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸன்னிதியிலும் கூரம் ஆழ்வான் ஸன்னிதியிலும் விசேஷ மரியாதைகள் நடைபெற்றன. ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியின் திருக்குணங்களுக்குக் காஞ்சீநகரம் முழுவதும் ஈடுபட்டிருக்கின்றது.

— நித்யஸ்ரீர் நித்யமங்களம். —

# ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம்.

திகழும் மேமாதத்து ந்ருஸிம்ஹப்ரியா இன்று (22–5–61ல்) வரப்பெற்றோம். "வான மாமலைவாஸியான ஒரு ஸத்யவாதி" என்னும் பெயரால் ஒரு மறுப்பு வியாஸமும், ஓர் வான மாமலை வித்வான் என்னும் பெயரால் "வானமாமலையில் ஸ்ரீ அழகியசிங்கர்" என்னும் வியாஸமும் வெளிவந்துள்ளன. இதே ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்துள்ள மற்ற வியாஸங்கள் இன்னாரின்னாரெழுதியவையென்று நிஜநாமங்களுடன் திகழும்போது இவ்விரண்டு வியாஸங்கள் மட்டும் அநாமதேயமாய் வெளிவந்திருப்பதை ப்ராமாணிகர்கள் கவனிக்கவேணும். குறிப்பிட்ட இரண்டு வியாஸங்களும் ந்ருஸிம்ஹப்ரியா ப்ரவர்த்தகர்களாலேயே சூதுவழியில் எழுதப்பட்டவையென்பதை நன்கு நிரூபிக்கிறோம்.

ஒரு மறுப்பு என்கிற தலையங்கத்தின்கீழ் எழுதப்பட்டுள்ள பங்க்திகளை க்ரமேண உதாஹரித்து அவற்றின் அஸம்பத்தத் தன்மையை உபபாதிப்போம்.

"சித்திரை மாதத்தில் தோன்றிய 147-ம் நெ. ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையில் 'வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச்செய்தி' என்ற தலைப்பின்கீழ் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்திற்கு அஸாதாரணமான ஈட்டை என்று தொடங்கி வாய்திறவாமலே யிருந்துவிட்டார்களாம் என்பது ஈராக எழுதப்பட்ட விஷயம் ஸ்வகபோலகல்பிதமே. அதை ப்ரஸக்தியாகக் கொண்டு வானமாமலை மடத்து வித்வான்கள் விஷயமாகத் தொடுக்கப்பட்ட தூஷணை பாணவர்ஷமும், ஸ்ரீ அழகியசிங்கர்பேரில் தொடுக்கப்பட்ட வாதப்போரும் ஆடுநனைகிறதேயென்று ஓநாய் அழுத அழுகைபோல் ஸ்ரீ வானமாமலை மடம் வித்வான்கள் விஷயமான ப்ர-அ. ஸ்வாமியின் விசேஷ அநுசோசநமும் இரண்டு மடத்தின் பேரிலும் ப்ர-அ. ஸ்வாமிக்கு ஸஹஜமான த்வேஷகார்யமே."

என்பது முதல்வாக்யச்ரேணி. இதை ஸ்ரீவானமாமலை வித்வான்களில் ஒருவரும் எழுத ப்ரஸக்தியே கிடையாது. மேலேகுறித்த வார்த்தைகளில் ஈராக என்றிருக்கிற அபத்தசொல்லை வானமாமலை வித்வான்கள் ஒருகாலும் எழுதமாட்டார்கள். இச்சொல்லுக்கு ஏதேனும் பொருளுண்டோ? தமிழில் சிறந்த [illegible]ரர்கள் மலிந்த வானமாமலையில் இத்தகைய அவச்சொல்லை யெழுதும் வித்வான் ஒருவர்கூட கிடையாதென்றும், ந்ருஸிம்ஹப்ரியா பரிவாரங்களுக்கே இது அஸாதாரணச் செல்வமென்றும் சிக்கெனத் தெரிந்துகொள்ளும் விவேகிகள் இந்த மறுப்பு வியாஸத்தில் ஸ்ரீ வானமாமலை வித்வான்களுக்கு ஸம்பந்தகந்தமும் கிடையாதென்று கல்வெட்டுச் செய்யக் குறையில்லை. ஈர் என்று பேன் முட்டைக்குப்பெயர். அதற்கு இங்கென்ன? அன்றியும், வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச்செய்தியை நாம் எழுதுகையில் —"இப்படியாக ஒரு ப்ரவாதம் நமது காதில்விழுகிறது; இதன் உண்மை நமக்கு நேராகத் தெரியாது.......;வஸ்துத: இது அஸத்தான வார்த்தையாயிருந்தால் மேலே நாம் எழுதுவதை யாரும் குறிக்கொள்ளவேண்டா" என்று ஸ்பஷ்டமாக எழுதியிருக்கிறோம். வானமாமலையிலுள்ள வித்வான்கள் இதைக்கடாக்ஷித்து அப்போதே நால்வர் நமக்கு ஸ்ரீமுகங்கள் அருளியிருக்கிறார்கள். அவர்களில் இது ஸ்வகபோல கல்பிதமென்று ஒருவரும் எழுதவில்லை. நாம் எழுதியிருந்தவகையில் ப்ரஸங்கம் நடந்ததுண்டு என்றும், "இங்கேயிருக்கின்ற வித்வான்

களில் யாராவது இதற்கு மறுப்புச் சொல்லுவதானல் சொல்லலாம்" என்று அந்த ஜீயர் சொன்னதாகத் தெரியவில்லையென்றும் 'லௌகிக விரோதமாக அவர் ப்ரஸங்கித்ததுண்டு; உடனே நாங்கள் சிலர் ஏகாந்தத்திற்சென்று "இப்படியெல்லாம் ஸ்வைரமாகப் பேசுவது தகுதியன்று" என்றுணர்த்தினேம் என்றும் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் நமக்கு எழுதியிருக்கிறார்கள். அந்த ஸ்ரீமுகங்கள் அவசியமானபோது அச்சாகி வெளிவரும்.

வானமாமலைமடத்து வித்வான்கள் விஷயமாக தூஷணபாணவர்ஷம் (ஸ்ரீராமாநுஜன் 147ல்) தொடுக்கப்பட்டிருப்பதாக எழுதியிருப்பது ஸர்வதா அஸம்பந்தம். அந்தவித்வான்களைத் தமக்கு நேயர்களாக ஆக்கிக்கொள்ள இவர்கள் கைப்பற்றின சூதுவழியிது. நம்முடைய ஸ்ரீ ராமாநுஜன் உலகமெல்லாம் பரவியுள்ளது. யாரும் எடுத்துப்பார்க்கலாம். வானமாமலை வித்வான்களின்மீது தூஷணைகளைத் தொடுக்க இடம் என்னவிருக்கிறது? ப்ரத்யுத அவர்களை ச்லாகித்தே யெழுதியிருக்கிறோம். (அதாஎன்னவெனில்;)

> "ஆக உபபத்திக்கு மிணங்காதே தேசிகோக்திகளுக்கும் பொருந்தாதேயுள்ள அர்த்தம் ஈட்டிலுள்ளதென்றால் இதைக் கேட்டுக்கொண்டு வித்வான்கள் வாய் திறவாதேயிருந்தார்களென்றால், அது ந சேத நீரஸநீயா:, அவிதர்க்யோ ஸநீயா: என்று பட்டரருளிச்செய்த கணக்கிலேயாமத்தனை"

என்று வானமாமலைச் செய்தி முடிவில் எழுதியிருக்கிறோம். இதன் விரிவுரை கேண்மின்; அஸம்பத்தோக்திகளைக் கேட்டுக்கொண்டு வானமாமலை வித்வான்கள் ஒருபோதும் வாளாவிருந்திருக்கமாட்டார்கள்; அப்படியிருந்தார்களென்பது உண்மையாயிருந்தால், கண்டிக்க முடியாத விஷயமென்று அவர்கள் ஒருகாலும் கருதியிருக்கமாட்டார்கள்; ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே "அவிஜ்ஞாதா" என்னும் திருநாமத்திற்குப் பிறர்செய்துள்ள அவத்யத்தை அநுவதித்து "ந சேத் ப்ருத்யா அபராதா ப்ராஜ்ஞேந பொருட்படுத்தப்பட்டாலும், ந நிரஸநா ர்ஹா:" என்று பட்டரருளிச்செய்த கணக்கிலே 'ஐயோ இப்படி அபார்த்தம் பேசுகிறாரே இத்தயதி' என்று உள்வெதும்பியிருப்பர்கள், ஒருகாலழுதிருப்பர்கள் என்றன்றோ நாமெழுதியிருப்பது. 'அவர்கள் அஸாமர்த்தியத்தினால் பதில்கூறாது வாளாவிருந்திருப்பர்கள்' என்று பொருள்படும்படியான வார்த்தை சிறிதாவது நாமெழுதியிருந்தாலல்லவோ அவ்விடத்து வித்வான்களை தூஷிக்க முயன்றதாக ஆகும். "தூஷணபாணவர்ஷம்" என்று ந்ருஸிம்ஹப்ரியை பிரசுரித்திருப்பதற்கு லவலேசமேனும் விஷயமுண்டோ? இப்படி யெழுதினதாகக் காட்டப்படுகிற வாநமஹாத்ரிவாஸீ ஸத்யவாதீ க: ந்ருஸிம்ஹ ப்ரியா பரிவாரம் தவிர வேறொரு வ்யக்தி கிடையாதென்பதை ஸ்பஷ்டமிட்டுரைப்போம்.

மேலெடுத்த வாக்யச்ரேணியில் "அழகியசிங்கர்பேரில் வாதப்போர் தொடுக்கப்பட்டிருப்பதாக" எழுதியுள்ள விஷயம் வாஸ்தவமே. ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் தங்களுக்கு அநுகூலமாகப் பல அர்த்தங்களிருப்பதாக இவர் பூர்வாச்ரமத்திலிருந்தே பறைசாற்றிவருகிறார். அந்தப் பழம்பாட்டையே போமிடங்களிலெல்லாம் ஓயாது பாடிக்கொண்டு போகிறார். இதற்காக நாம் ஸ்ரீராமாநுஜனில் எழுதியிருப்பதிவ்வளவே;—

> "தத்வஜ்ஞானமும் தசாவிஷ்கரண பாடவமுமுண்டாகில் 'ஈட்டில் எமக்கு அநுகூலமாகவுள்ள அர்த்த விசேஷங்கள்' என்று மகுடமிட்டு இவர்தாமே ப்ரியாவில் விஷயலேவநம் செய்தருளட்டுமே. ருஜுவான மார்க்கமேது இவர்களிடத்தில்?" என்று.

ருஜ்ஞவான மார்க்கம் தம்மிடத்தில் கிடையாது கிடையாது என்பதைத்தானே இவர்கள் ஸ்தாபித்துக்கொள்ளுகிறார்கள். 'ஈட்டைப்பற்றி நாங்கள் ஆஸ்தாவித்ததே கிடையாது' என்றுவது எழுதட்டும். ஆஸ்தாவித்திருந்தால் 'இப்படி ஆஸ்தாவித்தோமேயொழிய அப்படி ஆஸ்தாவித்ததில்லை' என்றுவதெழுதட்டும். "நாங்கள் ஈட்டை தூஷிப்பவர்களும், தூஷிப்பவர்களுக்கு ஸஹகரிப்பவர்களுமா யிருப்பதல்லாமல் தத்ஆவது நமிரதர்களல்லோம்" என்றெழுதினால் இது வஸ்து ஸ்திதியை யுணர்த்தினவாறும்.

வானமாமலை ஸத்யவாதியின் மறுப்பில் அடுத்தபடியாக எழுதப்படுகிறது "இம்மஹாநுபாவர்க்கு பரதூஷணமும் ஸ்வப்ரஸம்ஸையுமே நித்யக்ருத்யம்; இவருடைய பத்ரிகைகளுக்கும் இவ்விரண்டிலுமே முக்க்ய தாத்பர்யம்; ....." இத்யாதி. இதை யெழுதினவர் வானமாமலை வாஸியாயும் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தராயுமிருந்தால் தம் பெயரையொளித்திடாமல் வ்யக்தமாக நிஜநாமத்தையிட்டு எழுதியிருக்கலாம். அங்குக்குடிபுகவந்தவொரு புறம்போக்கின் மறைபெயரன்றோவிது. ஸ்ரீராமாநுஜன் 147, 148ல் ந்ருஸிம்ஹப்ரியா ஜயந்திமலருக்கு வியாஸங்கள் எழுதிக்கொடுத்திருந்த பண்டிதர்களில் பலருடைய ஞானச்சாயங்களை நாம் அவசியலசிப் பெருக்காறெடுத்தோட விட்டிருப்பதால் அவற்றுக்கு பல்பஜமான ஸமாதானங்கூட நம்மாலெழுதமுடியவில்லையே யென்கிற வயிற்றெரிச்சல் இங்ஙனேயல்லது வேறு என்ன எழுதுவிக்கும்? அவற்றுக்கெல்லாம் ஆர்ஜவத்துடன் ஸமாதானங்களை யெழுதிவிட்டு, பிறகு இவர்கள் எது எழுதினாலும்தகும். அதற்குச் சரக்கில்லாமையாலே "ப்ர. அ. ஸ்வாமி ஸகல ஆசார்ய புருஷர்களுக்கும் ஸகல பண்டிதர்களுக்கும் வசைமொழி ஸன்மானங்களை வாரியிறைக்கிறார்" என்றெழுதித்தானே த்ருப்தியை யடையவேண்டும். "ப்ர அ. ஸ்வாமி கார்மேகம்போல் பக்ஷபாதமின்றித் தம்பக்திக்கு மிஞ்சியே ஸம்பாவனை வழங்கும் வள்ளல்" என்று எழுதுகையில் இந்தஸம்பாவனைக்குப் பாத்திரமாக "அஹோபிலமடத்தார், வானமாமலை மடத்தார்" என்று இருமடங்களை மட்டுமே குறிப்பிட்டுள்ளது, பரகாலமடத்தார், திருக்குறுங்குடி மடத்தார், சங்கரமடத்தார், மத்வமடத்தார் என்றும் எழுதாதே அந்த மடங்களை யெல்லாம் விட்டதுவனோ? எந்த மடத்தை விட்டாலும் பரகாலமடத்தை விடவே கூடாதே. அடுத்த இதழில் "கார்மேகம்போல் பக்ஷபாதமின்றி ஸம்பாவனை வழங்கும் வள்ளலான ப்ர, அ. ஸ்வாமியிடம் ஸம்பாவனை பெற்றவர்கள்" என்றுமகுடமிட்டு விரிவுக்கு அஞ்சாதே யெழுதி வெளியிடட்டும். தப்பும் தவறுமாக எழுதிவருகிற பண்டிதர்களை யெல்லாம் தூஷணமதங்களாலே நிரஸித்துத் தன்னுடைய ப்ரஸம்ஸைகளை ஸ்தாபித்துக்கொள்பவன் ஆ. ஈ. ஒருவனே யென்பதில் என்ன தடை? இது ஸத்யோக்திதானே.

## ஸ்ரீமத் உ. வே. வித்வான், கோமல் சேஷாத்ரி ஐயங்கார் ஸ்வாமியின் ஆனந்த பரீவாஹமான ஸ்ரீமுகம்.

ஸ்ரீமதுபயவே. கோமல் ஸ்வாமியை அறியாதாரில்லை, சிலவாண்டுகளாக சென்னையில் வஸித்துக்கொண்டு ஆங்காங்கு அம்ருதவர்ஷங்களை வர்ஷித்துப்போருகிறார். இந்த ஸ்வாமி அஹோபிலமடத்து ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர். கீர்த்திமூர்த்தியான (புதுக்கோட்டை தானாதிகாரி) ஸ்ரீமத் காளி. ரங்காசார்ய ஸ்வாமியின் திருவடி நிழலில் வாழ்ந்தவராகையாலே ஸமரஸமான மனப்பான்மை பொருந்தியவர். விஷயங்களை உள்ளது உள்ளபடி க்ரஹிக்க வல்லவர். வீணான பொறாமையும் மாச்சரியமுமற்றவர். இந்த ஸ்வாமி ஸமீபகாலத்து ஸ்ரீராமாநுஜன்

அம்ருதலஹரீ பத்ரிகைகளைக் கடாக்ஷித்து 22—5—61ல் ஸைதாப்பேட்டையிலிருந்து அருளிய ஸ்ரீமுகத்திலுள்ள சில வாசகங்களைமட்டும் அனுவதிக்கக் காணீர்;—

"அம்ருதலஹரி அம்ருதலஹரியேயாதலால் அந்த அபர்யாப்தாம்ருதத்தை எவ்வளவு பருகியும் த்ருப்தியே பிறக்கவில்லை. குழாங்களுமநுபவித்தது. ........விஷயங்களை அலசியலசி அபூர்வ விஷயங்களை ஸாதிப்பது (மம நம மம நாகாரம ஸாமூரஸாமூரொவஷ:) என்ற முறைப்படி தேவரீருக்கே அஸாதாரணம்."

இவை ஸ்ரீகோமல் ஸ்வாமியின் அருள்மொழிகள். இதைக் கண்டவாறே ந்ருஸிம்ஹப்ரியா பரிவாரங்கள் "நாங்களெல்லாரும் ஒருமிடறாய் விஷமஉபசாரங்கள் செய்துகொண்டிருக்க தேவரீர் ஏனிப்படி யெழுதிற்று?" என்று தடபுடல் செய்யவுங்கூடும். நிரபேக்ஷரான அந்த ஸ்வாமி எதற்கும் அஞ்சார். காளி ரங்காசார்ய ஸ்வாமி அஞ்சினரோ? வாஸுதேவாசார்ய மஹர்ஷி அஞ்சினரோ? ஸ்ரீமத் பரமஹம்ஸ (வதஉரோந) தென்பரையாண்டவன் தாம் அஞ்சினரோ? அஸூயையினால் வயிறு வீங்கிச் சாகப்பிறந்தவர்கள் சாகட்டுமே தாராளமாக.

ஸ்ரீராமாநுஜன் 147ல் வெளியிட்ட ஸப்தரத்னத்தில் (பக்கம் 10ல்) 28, 29 ரத்னங்கள் "இதி சின்னி வீரராதாதம் வாக்யார்த்தமென்று ஊஹித்தம்" இத்யாதிகளை எடுத்தெடுத்து வசிக்கும்போது இதுகளுக்கு அடிவயிறு பகீல் பகீல் என்கிறது. என்னபண்ணுங்கள் பாவம்! வயிற்றெரிச்சலுக்குப் போக்குவீடாக எதையாவது எழுதித்தானே தரிக்கவேண்டும். "வெட்கங்கெட்ட பிழைப்பு" என்று இதுகளைப்பற்றிச் சொல்லாதாருளரோ? "ஆடு நனைகிறதே யென்று ஓநாய் அழுத அழுகைபோல்" என்று உவமை காட்டுகிறதுகளே! படித்தவர்களுக்கு இத்தகைய அசட்டு உவமைகள் தோன்றுமா? இந்த உவமைக்கு ப்ரக்ருதத்தில் என்னசேர்த்தி? என்ன பொருத்தம்? சிறிது ஸமந்வயம் பண்ணிக்காட்டட்டும். அசட்டுப்பட்டுக்கொண்டு திக்குமுக்கலாடித் திணறுவதற்கென்றே பிறந்திருப்பாருடைய கைத்திறமன்றோவிது. ஸ்ரீமத்வானமஹார்த்ரிவாஸிகளான வித்வான்களில் ஒருவர்கூட இங்ஙனமெழுதார்.

கம்பராமாயணம்—குகப்படலத்தில் ஒரு செய்யுள்;—இராமபிரானை வனத்தினின்று மீட்டு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருதற்காகச் சேனைகளுடன் போந்த பரதாழ்வானை இராமனுக்குக் காட்டிலும் தீங்கு செய்ய வந்தானாக மாறுபடக்கருதி விபரீதங்கள் செய்ய நினைத்த குஹப்பெருமாளுடைய கூற்று;

"அஞ்சனவண்ணன் என்னாருயிர்நாயகனாளாமே' வஞ்சனையா லரசெய்திய மைந்தரும் வந்தாரே?
சேஞ்சர மேன்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ? உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை
யோதாரோ?"

இப்பாட்டில் ஈற்றடியில் ஒரு விசேஷம். 'என்னால் வதைக்கப்படவேண்டியவனான இப்பரதன் எனது அம்புக்குத் தப்பிப் பிழைத்துப்போய்விடுவானாயின் உலகத்தார் என்னை வெகு நீசனான குஹனென்று சொல்லமாட்டார்களோ? என்பதாக இவ்வளவே பொருள் கூறுகின்றார்கள். உரைகளிற் காணும்பொருள் இவ்வளவே. நாய்க்குகன் என்பதற்கு நீசனான குஹன் என்பதுமட்டும் பொருளல்ல. நாய் நன்றியறிவுமிக்க ஜந்துவேயாயினும், சில நாய்கள் எதிரிகளிடும் தின்பண்டங்களைத்தின்றுகொண்டு அவர்களுக்கு உதவியாக இருந்துவிடுவதுமுண்டு. இதுகொண்டே 'குலைக்கிறநாய்க்குக் குழக்கட்டை போடுங்கள்' என்று பழ

மொழியொன்று தோன்றியுளது. அத்தகைய நன்றியறிவு கெட்ட நாயின் விவக்ஷை கொண்டே இங்கு "நாய்க் குகனென்றெனையோதாரோ?" என்றது. இவ்வண்ணமாக எதிர்த்தலையில் நாலு தட்டுகாசுபெற்று க்ருதக்நதைகொண்டு எதிர்த்தலை விரும்புகிறபடி எழுதிக்கொடுக்க முன் வருமவர்கள் வானமாமலையிலுளரோ? இருப்பதாக நமக்குத் தெரிய வில்லை. "கிம்கிம் ந ஸம்ஹாவ்யதே?" எனினும் இது ஸம்பாவ்யமா அஸம்பாவிதமே.

ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீச்வரரென்கிற நமது விருதைப்பற்றி சென்னைவாஸிகளும் டில்லிவாஸிகளுமான பல மஹான்களும், விசேஷித்து ஸ்ரீமத் காளி ரங்காசார்யஸ்வாமியும் வியாக்கியானங்களெழுதி உலகம்பரவ வெளியிட்டிருந்தும் * ஸம்தாவயதிஸம்சௌ ஹாரா வாமதஜூஷ்கமென்று கிடக்கிற விதுகளுக்கு தாவஸாந்தி ஏற்படவில்லையந்தோ! ஒருவன் பெருமாள்! என்று பெயர்பூண்டானும்; அதில் சிலர் பொறாமைகொண்டு ஆக்ஷேபிக்க, பெரியபெருமாளென்று பெயரிட்டுக்கொள்ளத்தெரியாத முண்டங்களே! உங்களுக்கு ஆக்ஷேபம் ஒரு கேடா? என்றார்களாம்—என்றொரு விநோத வார்த்தையை இஞ்சிமேட்டுஸ்வாமி பூர்வாச்ரமத்தில் பல்காலும் பணிக்கக் கேட்டிருக்கை. ஸகல ஜகதாசார்யரென்று இதுகள் பறை சாற்றிக்கொண்டால் தடுப்பாராரோ?

## வானமாமலையில் ஸ்ரீ அழகியசிங்கர் என்னும் வியாஸத்தின் ஆராய்ச்சி.

ஸ்ரீராமாநுஜன் 147-ல் வெளிவந்துள்ள நமது ஸப்தரத்னத்தில் (ரத்னம் 31-ல்) "விசிஷ்டாத்வைதத்தைப்பற்றி அழசங்கரால் விசேஷமாக உபந்யாஸம் செய்துவைக்கப் பட்டது. என்று எழுதியுள்ளவிவர்கள் அதனைப் பெருநாடு காணப் பிரசுரம் செய்து வைக்கட்டுமே; உபயோகமற்ற வியாஸங்களால் வத்ர பூரணம் செய்வதை விட்டு ஸ்வஸம்ருதிஸம்ஸக்திகளாலேயே நாடுகளையும் நகரங்களையும் நன்கு அநுக்ரஹிக்கலாமே; ஆச்சரியமும் அத்புதமும் அப்ரமேயமுமான ஸ்ரீஸூக்திகள் ஸாதிக்கும் வல்லமையை யாவரு மறிந்து உகக்க வழியுண்டாகுமே." என்றெழுதியுள்ளோம். அதைக்கண்ட சரணஹ்ருதக்கும் ரோஷம்விஞ்சி ஓர் உபந்யாஸத்தை ப்ரசுரம்செய்தாயிற்று. "ஓர் வானமாமலை வித்வான்" என்று இதற்குக் கையெழுத்துப்பேர்வழி. ஒருமறுப்பு என்ற முந்தின வியாஸத்தில் பெயரை வெளியிட்டுக்கொள்ள அஞ்சவேண்டியகாரணம் அதிகமாக விருப்பதால் "வாநாத்ரிவாஸீ கச்சந." என்றிட்டது ஸரி. இங்கு என்ன பயம்? எதற்காகப் பெயரையொளிப்பது? உண்மையில் வானமாமலை ஸ்திரவாஸி வித்வான்களில் ஒருவர் எழுதியதாயிருந்தால் இன்னாரென்று நாமநிர்தேசம் ஸ்பஷ்டமாகவே யிருந்திருக்கும். அவ்வூரில் வந்தேறியாய்க் குடிபுகுத்தப் பட்டவொரு நிரக்ஷரகுக்ஷியை வித்வானாகவைத்து, தானேயெழுதிக்கொண்ட வியாஸமிது என்பதை நிஸ்ஸந்தேஹமாக மூதலிக்கிறோம்.

"நின்றதெல்லாம் நெடுமால் என்று ஆழ்வார் முத்திரை வைத்தபடி" என்று காண் கிறது. இப்படியொரு ஆழ்வார் பாசுரமிருப்பதாக இதுவரை கேட்டதில்லை; இப்படித் தவறாக எழுதுவது வானமாமலை வித்வான்களில் ஒருவர்க்கும் மறந்தும் ஸம்பவிப்பதன்று. ஸ்ரீ முஷ்ணத்தில் திருவிசாகப் புறப்பாட்டில்அத்யாபகர்கள் திருவிருத்தம் ஸேவிக்க, "என்னுத்ஸவத்தில் திருச்சந்த வருத்தம்எதற்காக?' என்று கத்தின யதிக்கே இத்தகைய மருள்கள் மலிந்து கிடப்பதனால் அந்தவ்யக்தியேதான் ஓர்வானமாமலை வித்வானாக வடிவுகொண்ட தென்னத் தட்டில்லை. அன்றியும், "பரம்வ்யூஹம் விபவம் அர்ச்சை அந்தர்யாமி என்று பல விதமான அவதாரம் செய்கிறார்' என்று எழுதப்பட்டிருக்கிறது. இந்த அஸங்கதோக்தியை வானமாமலை வித்வான்கள் காதுகொடுத்துக் கேட்பர்களா? கைகொண்டு எழுதுவார்களா?

விபவம் அர்ச்சை என்பவற்றைப்பற்றி மட்டுமே அவதார வ்யபதேசமிணங்கும். விபவாவதாரம், அர்ச்சாவதாரம் என்பதுண்டேயல்லது பராவதாரம் வ்யூஹாவதாரம் என்று வழங்கக் காதிலும் கேட்டதில்லை, நூல்களிலுங் கண்டதில்லை. ரஹஸ்யத்ரயஸாரே தத்வத்ரய சிந்தநாதிகாரே அந்தர்யாம்யவதாரமென்கிற திருவாக்கு காண்கையாலே அங்ஙனே வழங்கலாமெனினும் பரமபதத்திலிருப்பை அவதாரமென்பதும், வ்யூஹஸ்திதியை வ்யூஹாவதாரமென்பதும் திருவவதரித்தா ரென்பதைப்பார்த்து திருப்பரம பதித்தாரென்பதோடொக்குமத்தனை.

முக்கியமான வார்த்தையொன்றே. வானமாமலை வித்வான்கள் பலர் ஏறக்குறைய ஐம்பது வருஷகாலமாக நமக்கு அடிக்கடி ஸ்ரீ முகங்கள் ஸாதிப்பதுண்டு. யுவாக்களாயிருக்கும் வித்வான்கள் முப்பது இருபது பதினைந்து வருஷகாலமாகக் கடிதங்கள் எழுதுவதுண்டு. அவற்றில் நம்முடைய வெளியீடு ஒவ்வொன்றையும் பெற்றவுடனே அதைப்பற்றி யெழுதுகையில் "இன்று யாவரும் குழாங்கூடியநுபவித்தோம்; சூழ விருப்பார் பேரின்பவெள்ளத்தே என்று ஆழ்வார் [illegible]மாக ஸாதித்தருளினபேற்றை [illegible] பெற்றோம். இந்த அஜாமலஸ்தநங்கள் எதற்காக இப்படி தேவரிடம் அகப்பட்டுக்கொண்டு திண்டாடுகிறதுகளோ தெரியவில்லையே" என்று விசித்ரவிசித்ரமாக எழுதியுள்ளார்கள். அவை [illegible]யெவிநோதியெனது. இந்த வித்வான்கள் ஸமீபகாலத்தி லெழுதியுள்ளதொரு கடிதத்தில் (அதாவது ஸ்ரீ ராமாநுஜன் 147, 148 வெளிவந்தபிறகு)

> "தேவரீர் பலநூறுதடவைகள் திருத்திக்கொடுத்தும் இன்னமும் ப்ரும்மம் ப்ரும்மம் ப்ரப்ரும்மம் என்றே முட்டிக்கொள்ளுகிற இந்த சங்கிடுகுட்டைகளைப் பொருள்படுத்தி எதற்காக தேவரீருடைய [illegible]வகாசங்களைச் செலவிடவேணும்? ப்ரஹ்ம என்னும் ஸம்ஸ்கிருதபதம் தமிழில் ப்ரும்மம் என்று எப்படியாகும்? என்கிறஇந்தச் சிறுவிஷயத்தையும் அறியமாட்டாதே பலகால் உத்போதநம் பண்ணியுங்கூட அறியமாட்டாத அசடுகளை எதிரிகளாகக்கொண்டு அருமருந்தன்ன அர்த்தங்களை வெளியிடுவது யுக்தமென்று தோன்றவில்லை"

என்றெழுதி யிருக்கிறார்கள். இப்போது ப்ரியாவில் வெளிவந்திருக்கிற உபந்யாஸத்தில் (அதாவது அழசங்கர் வானமாமலையிற்செய்த உபந்யாஸத்தில்) ப்ரும்மமும் பரப்ரும்மமும் எத்தனைதட்வை வந்திருக்கிறதென்று எண்ணிப்பாருங்கள். இதைப்பற்றின சிக்ஷணத்தை நாம் ஸ்ரீராமாநுஜன் 147லும் விரிவாகச்செய்திருக்கிறோம். அதை ந்ருஸிம்ஹப்ரியா பரிவாரங்கள் கண்டதாகவும் வெளியிட்டாய்விட்டது. "பகற்கண்ட குழியிலே இரா விழுவாரைப்போலே" என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. பகற்கண்டகுழியில் பகலிலேயே விழுவது இவர்களின் பணியாகவுள்ளது. இத்தகைய அஸந்தர்ப்ப வியாஸத்தை ஸ்ரீவானமாமலை வித்வானெழுதினுரென்றால்..........மேலே என்ன எழுதுவது!

அன்றியும் இந்தவானமாமலை யுபந்யாஸத்தில் "கண்ணனும் * [illegible] * என்றும் * [illegible] என்றும் லவா சொல்லுகிறார்" என்றுள்ளது. லவா சொல்லுகையாவது என்ன ? இது என்னபாஷை? தற்காலம் பேரருளாளன் மஹோத்ஸவம் ஸேவிக்க ஸ்ரீவானமாமலை வித்வானொருவர் இவ்விடமெழுந்தருளியிருக்கிறார்; அவரையும் லவா என்றாலென்னவென்று கேட்டோம்; அவரோ குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார், 'இது ஒன்றுதானு? வாயில் வருவதெல்லாம் துருஷ்கயவந பாஷைதானே' என்கிறார். இப்படிப்பட்டவிதில் வானமாமலை வித்வான்களைக்கொண்டு கூட்டுவது என்னே !

"ஆகாதகாலத்திற்கு அண்ணுத்வேஷம்" என்ற பழமொழியின்படி உண்மையாகவே ஒரு வானமாமலை வித்வான் மறுப்பில் ஸம்பந்தப்பட்டிருந்தால் இந்தப்பழமொழி பலித்தே தீருமென்பதில் ஐயுறவேண்டா.

---

ஸ்ரீ

# ஸதர்த்தசதகம் நற்பொருள் நூறு.

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது.

ஶ்லோ ॥ அஸதர்த்தநிராஸவர்த்தகம் ஶதகம் ஸதர்த்தமிஹ ஸமாஹ்ருதம் மயா ।
உபஹ்ருதம் த்ருதம் விவேகிநாம் விபஶ்சிதாம் ரஸிகாநாம் ஸாதிநாம் ॥

## முன்னுரை

ஸதர்த்தஶதகம் என்ற வடமொழிப் பெயரையும் 'நற்பொருள் நூறு' என்ற தென்மொழிப் பெயரையுங்கொண்ட இந்நூலை ரஸிக விவேகி வித்வஜ்ஜனங்களுக்கு உபஹரிக்கிறேன். இந்த நூறு அர்த்தவிஶேஷங்களும் ஸம்பிரதாயத்தை மட்டும் சேர்ந்தவையல்ல; நாநாஶாஸ்த்ரஸம்பந்திகளுமானவை. பலபல நூல்களைப் பலகால் பரிசீலனை பண்ணித்தெரிந்துகொள்ளவேண்டிய அரும்பெரும் பொருள்களே ஈண்டு எளிய முறையில் விளக்கப்படுகின்றன. இந்நூலுக்கு அஸதர்த்த நிராஸஶதகம் என்று முன்னம் பெயரிட்டோம். உண்மையில், ஆக்ருதம் வாதியாய் நிற்கிற திருமலதாதாசாரியரும் அவர்க்குத் தோள் தீண்டிகளானவர்களும் வெளியிட்டுள்ள அபார்த்தங்களைக் கண்டித்தே இந்நூல் அவதரிப்பதனால் அஸதர்த்த நிராஸமென்னும் பெயர் இதற்கு மிகவும் பொருந்தும். எனினும் ஸாத்விகோபஜீவ்யங்களான நற்பொருள்களே இதில் மிகமிக விளங்குவதனால் அந்தப்பெயரைத்தள்ளி இந்தப் பெயரையே யுக்தமாகக்கொண்டு விந்யஸித்தோம். டீ டீ டீ ஶதஹம்ஸீ என்கிற பெயரும் இதற்கு நன்கு பொருந்தும். ரஸிக விவேகிகள் ஒவ்வோரர்த்தத்தையும் தேனும் பாலுமமுதமாகக் கொண்டு அநுபவித்துக் களிக்கக்கடவர்கள். ... .... *

### 1. தன்னடியார் திறத்தகத்துப் பாசுர விளக்கம்.

திருமகள் கொழுநனை எம்பெருமான் தான் பரமகாருணிகனாயிருக்கச் செய்தேயும் அவரவர்கள் செய்யும் பிழைகளுக்குத் தக்கபடி தண்டிக்கின்றவனுமிருக்கையாலே அடிபணிந்தவர்களும் தம் தம் அபராதங்களுக்குத் தகுந்தவாறு பிராயச்சித்தங்களைச் செய்துகொண்டாலல்லது அவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லை யென்று விரதங் கொண்டிருப்பன். அப்போது "ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்." என்கிறபடியே அநுக்ரஹமே வடிவெடுத்தவளும் நிக்ரஹமென்பதை ஒருபோது மறியாதவளுமான நம்மன்னை ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் "கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வமுசிதைருபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந:" [ஸ்ரீகுணரத்நகோசே] என்கிறபடியே புருஷகாரக்ருத்யத்தைச் செய்து அபராதி சேதநர்களையும் அணுகிவந்ததே காரணமாக எம்பெருமானோடு கூட்டுகிறாள். அப்படிப்பட்ட புருஷகார பலத்தாலே தலையெடுக்குங்குணங்களையுடையனான ஸர்வேச்வரனும் அந்த சேதநர்களைத் திடமாகத் திருவுள்ளம் பற்றுகிறான். பிறகு பிராட்டியானவள் "இந்த ஆர்த்தாபராதிசேதநர்களை நமது கணவன் திருவுள்ளம் பற்றின விது அன்பினாலா? அல்லது நம்முடைய நிர்ப்பந்தத்திற்காகவேயா? நம்முடைய நிர்ப்பந்தத்தாலே ஸ்வீகரித்ததாகில் ஒருகால் இவர்களைக் கைவிட்டு விடவுங்

கூடும். அப்படியல்லாமல் நிஜமான அன்பினால் ஸ்வீகரித்ததாகில் ஒருநாளும் கைவிட நேராது; ஆகவே, இந்த பரீக்ஷை அவசியமென்று தோன்றிப் பிராட்டி, தானே புருஷகாரம் செய்து சேர்த்த சேதனர்கள் விஷயமாகவே சில குற்றங்களை யெடுத்துரைக்கத் தொடங்குகிறாள்;

'நாதா! நான் ஏதோ ப்ரமித்து இவர்களுக்காக உம்மிடம் சிபார்சு செய்து மன்றாடிச் சேர்ப்பித்தேன்; பிறகு ஆராய்ந்து பார்த்தவளவில் இவர்கள் அளவுகடந்த அஸஹ்யாபராதங்களைச் செய்தவர்களென்று நன்றாய்த் தெரியவருகின்றது. ஆகையாலிவர்களைக் கைக்கொள்ளாது தள்ளி விடுவதே நலமென்று தோன்றுகிறது' என்கிறாள். அது கேட்ட எம்பெருமான் மறுமொழி கூறுகின்றான்—'பிராட்டியே! இவர்கள் உன்னடியார்களாயிருந்த போது ஒரு கால் குற்றங்களைச் செய்திருக்கக்கூடும்; என்னடியார்களான பின்பு ஒரு போதும் குற்றஞ் செய்யார்கள்' என்று. இது கேட்ட பிராட்டி "நாதா! நீர் உண்மையை க்ரஹிக்கவில்லை. இவர்கள் குற்றமே வடிவெடுத்தவர்கள்; ஒரு க்ஷணகாலமும் இவர்களால் குற்றம் செய்யாதிருக்க முடியாது. நீர் சிறிது விமர்சித்துப் பார்க்கவேணும்; குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை செய்தேயாகவேண்டும்' என்கிறாள். அப்போது எம்பெருமான் கூறுகின்றான்—'என்னடியார் குற்றஞ்செய்யார்களென்று நான் திண்ணமாகவெண்ணுகிறேன். குற்றவாளர்களேயிவர்கள் என்னில் குற்றத்தையே நற்றமாகக் கொள்ளுகிறேன் போ—என்று.

இப்படி பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒரு ஸம்வாதம் நிகழ்ந்ததாக வைத்துப் பெரியாழ்வார் பாசுரம் பாடியுள்ளார். இந்த ஸம்வாதத்தினால் எம்பெருமானுடைய வாத்ஸல்யாதிசயமும் அப்ரகம்ப்யமான பக்தாநுக்ரஹ மஹிமையும் ப்ரகாசப்படுத்தப் பட்டனவாகின்றன. தோஷங்களிலும் குணத்வபுத்தியே வாத்ஸல்யமென்று பூர்வாசார்யர்கள் நிர்ணயித்தார்கள். இந்த நிர்ணயத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் தாம் சரணாகதிகத்ய வ்யாக்கியானத்திலும் ஸ்ரீபாஷ்யச்ருதப்ரகாசிகையிலும் ஸுஸ்பஷ்டமாக அநுக்ரஹித்திருக்கிறார். அந்த ஆசார்ய ஸார்வபௌமருடைய திவ்யஸூக்தியும் சிலர்க்கு ஹேயமாகின்றதென்பது இருக்கட்டும். அவர்களின் அபராதங்களுக்குத் தக்கபடி தண்டிக்குமியல்வினனான எம்பெருமான் சில ஸமயங்களில் சிலர் திறத்தில் "செய்தாரேல் நன்று செய்தார்" என்று அருளிச்செய்கிறானென்று ஆப்ததமரான ஓராழ்வார் அருளிச்செய்திருப்பது அபலபிக்கமுடியாமலிருக்கின்றது. பெருமாளுக்கும் பிராட்டிக்கும் இப்படியொரு ஸம்பாஷணை நடந்தபோது ஆழ்வார் கேட்டுக் கொண்டிருந்தாரோவென்றும் இவரே கற்பனையாகக் கட்டுகிற கதை தானேயிது என்றும் சிலர் சொல்லுவதுண்டு. அவர்களுக்கு நாம் இரண்டு விதமாக பதில் சொல்லுகிறோம். * தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி * என்று வரங்கொண்ட வால்மீகி முனிவரிற் காட்டிலும் அதிசயித்த வரம் பெற்ற ஆழ்வார்கள் உள்ளது உள்ளபடியே வெளியிடுவர்களேயொழிய கற்பனையாக அணுவளவும் சொல்லார்கள். அருளிச்செயல்களில் விச்வாஸமில்லாதவர்களுக்கு நாம் இங்கே பதில் சொல்ல அவசியமில்லை என்பதாக ஒரு ஸமாதானம். (2) பிராட்டிக்கும் பெருமாளுக்கும் உண்மையாக இப்படியொரு ஸம்பாஷணை நடந்ததில்லை; ஆழ்வார் தாமே கற்பனை செய்த ஸம்வாதமேயிது என்று கொண்டாலும் குறையில்லை. இப்படியொரு ஸம்பாஷணையையிட்டுப்பேசுகிற ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்று பார்க்கவேணும். நிஷ்ப்ரயோஜநமாகவா ஒன்று பேசி வைப்பாராழ்வார்? திவ்ய தம்பதிகளுக்கு ஒரு ஸம்பாஷணை நடந்ததாகத் தாமே கல்பனை செய்தாலும் அதிலிருந்து ஒரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டருளக் கருதினாராழ்வார் என்று இசைந்து தீரவேண்டுமே. அந்த சாஸ்த்ரார்த்தம் எது என்று அதைக் கண்டறிதல் வேண்டும்.

இப்பாசுரத்தின் முதலடியில் தாமரையாள் சிதகுரைத்ததாகச் சொல்லி, மேல் இரண்டாமடியில் எம்பெருமானுடைய வார்த்தைகளை இரண்டு வகையாக வைத்திருக்கிறார். 'என்னடியார் அது செய்யார்' என்பது முதல்வார்த்தை; 'செய்தாரேல் நன்று செய்தார்' என்பது இரண்டாம் வார்த்தை. இவ்விரண்டு வார்த்தைகள் ஏதுக்கு? தாமரையாள் சிதகுரைத்தவுடனே எம்பெருமான் 'என்னடியார் செய்தது எனக்கு நன்றே' என்று ஒரே வார்த்தையாகச் சொல்லிமுடித்திருக்கலாமே; என்று இதை அவசியம் விமர்சிக்கவேணும். விமர்சிப்போம்; இரண்டு வார்த்தைகளின்றிக்கே ஒரே வார்த்தையாக முடிந்திருக்குமாயின் சாஸ்த்ரார்த்த க்ஷேபமுண்டாகிவிடும். பக்தர்கள் செய்யும் பாபங்களெல்லாம் நியமேந எம்பெருமானுக்கு போக்யமாகி விடுவதாய் ஒரு அபஸித்தாந்தம் செய்ய ப்ராப்தமாகும். 'என்னடியார் அது செய்யார்' என்கிற முதல்வார்த்தையானது பகவத்பக்தர்கள் பாபஞ்செய்யக்கூசியே வர்த்திக்க வேணுமென்று தெரிவிக்கவே தோன்றியது. ப்ராமாதிகமாகவோ அமதிகமாகவோ தோஷங்கள் செய்ய நேர்ந்துவிட்டால் அவற்றில் தனக்கு தோஷபுத்தியுண்டாகாதென்று தன் குணவிசேஷத்தையும் காட்டவேண்டி இரண்டாவது வார்த்தையாக * செய்தாரேல் நன்று செய்தார் * என்பது நிபந்திக்கப்பட்டது. ஆக இப்படிப்பட்ட இரண்டு சாஸ்த்ரார்த்தங்களை ப்ரகாசப்படுத்துவதே திவ்ய தம்பதிகளின் ஸம்பாஷணையாகவைத்த இந்தப் பாசுரத்திற்கு முழு நோக்கு. இதுவன்று எனின், வேறு எது? என்பதை ப்ராமாணிக மார்மத்தில் நின்று பேசவேண்டும்.

"நன்று செய்தாரென்பர்" என்று நிறுத்தாமல் "என்பர் போலும்" என்று சொல்லி வைத்திருக்கையாலே வஸ்து வ்ருத்தியில் நன்றன்று என்றதாகத் தேறிவிட்டதாய்ச் சிலர் கருதுகின்றார்கள். இது தமிழ் மரியாதைக்குச் சிறிதும் இணங்கியதன்று என்பதைப் பண்டே நாம் பல நிதர்சனங்களைக் காட்டி நிரூபித்திருப்பதால் அதற்கு மறுமொழி எதிர்பார்க்கப்படுகிறது. "அணியார் வீதியழுந்தூர் எந்தை பெருமானூர் மருவி நின்ற ஊர் போலும்" [பெரிய திருமொழி 7-5-1] என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்கிறார். இங்கு 'ஊர்போலும்' என்கையாலே வஸ்து வ்ருத்தியில் ஊரன்று என்கிற வியாக்கியானமே பிறர் செய்ய வேண்டியதாகும். போலும் என்றவிது (என்பர்) என்றதோடு சேர்ந்திராமல் (நன்று) என்றதோடாவது, (செய்தார்) என்றதோடாவது சேர்ந்திருந்தால் ஒருவேளை இவர்கள் சொல்லும் அபார்த்தத்திற்கு இடமிருக்கலாம். ஆழ்வாருடைய ப்ரயோகம் அப்படியில்லை. போலுமென்பது * என்பரோடு சேர்ந்திருக்கையாலே, நன்று செய்தாரென்று பெரிய பெருமாள் சொல்லவில்லை என்பதாக இவர்கள் பொருள் கூறவேண்டும். அப்படியே கூறுகிறோமென்றும், அதனாலும் எங்களுக்கு விவக்ஷிதமானது தேறிவிடுகிறதென்றும் சொல்லுகிற பக்ஷத்தில், ஒரே கேள்விக்கு இவர்கள் பதில் கூறவேண்டும்; தன்னடியார் திறத்தகத்துச் சிதகுரைத்த தாமரையாள் எந்த அபிப்ராயத்தோடு சிதகுரைத்தாள்; அடியார்களை எம்பெருமான் உதறித் தள்ளிவிடவேணுமென்கிற அபிப்ராயங்கொண்டா சிதகுரைத்தாள்? அதற்கு ப்ரஸக்தியில்லையே. எம்பெருமான் பக்கலிலிருந்து ரஸகனமான வார்த்தை வெளிவருமென்றும் அதைச் செவிகுளிரக் கேட்கவேணுமென்றும் பாரித்தன்றோ சிதகுரைத்தது. 'என்னடியார் செய்தது தப்புத்தான்' என்று எம்பெருமான் சொல்லிவிட்டதாகவே வைத்துக்கொள்வோம். பிறகு அந்த அடியார்களின் கதி என்னாயிற்றென்று கேட்கிறோம். ப்ராயச்சித்தம் செய்து கொண்டு வாருங்கள் என்று சொல்லி உதறித்தள்ளிவிட்டானா? அல்லது, சித்திரகுப்தன் சுருணையிலேறிய சூழ்வினைகட்குத் தக்கபடி நரகவேதனைகளை யனுபவிக்குமாறு சொல்லித் துரத்தி விட்டானா? இதற்கு மாத்திரம் விடை கூறி நிற்கவேணும். யாரென்றால் D.T.T.

பொருள். அதுபோலவே 'அஸ்ய அவரோ ப்ராதா' என்றால் இவருடைய எண்ணப்படிக்கு நான் தம்பியாகிறேன்; என்னை இவர் தம்பியாக எண்ணியிருக்கிறார் என்றபடியாம்.

இவ்வண்ணமாகவே ப்ரக்ருத ஸ்தலத்திலும் தேபூயிஷ்டாம் என்பதற்கு 'உன் எண்ணப்படி கனத்ததான' என்று அர்த்தமாகக் குறையில்லை. அதாவது-உனக்குக் கனத்துத் தோற்றும்படியான-என்றதாகும். பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "அஞ்ஜலிஹாரம் வஹதே" என்றருளிச்செய்கிறார். ஓர் அஞ்ஜலியை ஹாரமென்றதும் அதை இந்த எலியெலும்பன் சுமக்கிறானென்றதும் என்ன திருவுள்ளத்தாலே? என்று ஆராய வேணும். அத்தலையில் நினைவாலே இது கனத்த பாரமாகவே தோற்றுமென்று மருமமறிந்தன்றோ பட்டர் அங்ஙனே அருளிச்செய்தது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "தொழுது மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு எழுதுமேன்னுமிது மிகை யாதலின்" என்கிற பாசுரத்தினால் ஆராதநத்தில் உத்யோக மாத்ரத்தையும் எம்பெருமான் பூயிஷ்டமாகக் கொள்ளுகிறானென்பதை ஸ்பஷ்டமாகக் காட்டியருளினார். இங்கே மிகையென்றது அவனது திருவுள்ளத்தையிட்டேயன்றோ.

அதுவன்றியும் * ஒழிவில் காலத் திருவாய்மொழியில் "வேங்கடத் துறைவார்க்கு நமவென்னலாங் கடமையது சுமந்தார்கட்கே" என்றருளிச்செய்கிறாராழ்வார். "நம: என்னும் உக்தியைச் சொன்னவர்களுக்கு" என்று விவக்ஷிதமான இவ்விடத்தில் "அது சுமந்தார்கட்கே" என்று அருளிச் செய்தது ஏன்? என்று ஆராய்ச்சி செய்தருளின நம்பிள்ளை—" இவன்பக்க லுள்ளதைக் கனக்க நினைத்திருக்கு மவன்கருத்தாலே" என்று அருளிச்செய்து அதற்கு ஸம்வாத ப்ரமாணமாக "தே பூயிஷ்டாம்" என்கிறவிதனை உதாஹரித்தருளியுள்ளார். அவ்விடத்தில் உரைகாரர் "தே பூயிஷ்டாம் நம உக்திம்—உக்தி: நம இத்யேதாவந்மாத்ராபி பகவதபிப்ராயேண பூயிஷ்டா பவதீதி அர்த்த:" என்று விவரித்துள்ளார். முனித்ரய ஸம்பிரதாயத்தில் தலைவரான ஸாக்ஷாத் ஸ்வாமி என்பவரும் தம்முடைய திருவாய்மொழியுரையில் இதேயிடத்தில் இந்த ச்ருதிவாக்யத்தையே உதாஹரித்து இங்ஙனே அர்த்தம் நிரூபித்துள்ளார். "*ஹூயிஷ்டாம் தெ நம உக்திம் விதெம என்கிறபடியே ஈச்வர புத்தியாலே இத்தைச் சுமையாகச் சொல்லுகிறார்" என்பது அவருடைய பங்க்தி ஸ்பஷ்டமாகவுள்ளது. இது வாகீயாவதாந்வாமன்று. பரமாஸிக்யத்தையும் பரம ப்ராமாணிகத்வத்தையும் விளக்கவல்லதன்றோ.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (202) "இருத்து மெண்டானாய்" என்கிற சூர்ணையின் வ்யாக்யானத்தில் மணவாளமாமுனிகளும் இவ்வர்த்தத்தை யெடுத்துக்காட்டி யருளினார்.

"செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்கிறபடியே திருவாய்மொழியோடு இணங்கவேயன்றோ ச்ருதிக்கு அர்த்தம் கொள்ளவேணும்; ஆகவே "தே பூயிஷ்டாம்" என்கிற அந்வயம் கொண்டு நம்பிள்ளை காட்டியருளும் பொருள்தானே ப்ராமாணிகர்களின் திருவுள்ளத்திற்குப் பாங்காயிருக்க வடுக்கும்.

---

## 4. "ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே" என்ற தேசிகஸூக்தியின் விளக்கம்.

நந்தன ஹூ வைகாசி மாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் சாஸ்த்ராநுபந்தம்-8 என்று சேர்க்கப் பட்டிருக்கிற வியாஸம் D. T. தாதாசார்யருடையது. வரம் என்று மகுடமிட்டு எழு

தப்பட்டுள்ள அந்த வியாஸத்தில் ஸங்கதமான ஓரக்ஷரமும் கிடையாதென்பது பண்டே பரக்க நிரூபிதம். அதன் ஸாரஸங்க்ரஹம் வருமாறு;—

வரம் என்ற தலைப்புடைய வியாஸமானது டீடீ கைநாடியெல்லாம் பாதாளத்தில் விழுந்து போயினவென்று அனைவருமறிந்து கொள்ளும்படி எழுதப்பட்டிருக்கிறது. தம்முடைய வீண் வாதம் பயன்படாதென்று தெரிந்துகொண்டார். ஆனாலும் வாஸநாபலம் விடாதே. இடையில் எழுதுகிறார்—''ஸர்வே ஸ்வபந்தீதி மதிர் பதைஷாம்'' என்று. ''எல்லோரும் உறங்குகிறார்களென்று அண்ணாவின் எண்ணம் பாவம்!'' என்கிறார். உத்தமர் கோவில் பக்கத்தில் ஒரு மாந்தோப்பு உண்டு. அதைக் காவல்காக்க இருகாலுமில்லாத ஒரு மொண்டியையும் இருகையுமில்லாத ஒரு முடவனையும் வஸ்த்ராலங்காரங்கள் செய்து தடியுடனே உட்காரவைத்திருப்பார்கள். இதை அனைவருமறிவாராதலால் ஒருவரும் அஞ்சாமல் வந்து மாம்பழங்களைப் பறித்துப் போவர். 'நாங்கள் உறங்குகிறோமென்று எண்ணமோ?' என்று அக்காவலாளரிருவரும் கேட்பர்களாம்; நன்றாகக் கண்விழித்துக் கொண்டிருக்கிறீர்களென்றுபார்த்துக்கொண்டுதானிருக்கிறோம் என்பர்களாம் ஒவ்வொருவரும்.

''உக்த்யா தநஞ்ஜய'' என்கிற ந்யாஸதிலகச்லோகத்தில் (ச்ருத்வா வரம்) என்னப்பட்ட வரம் எது வென்று ஆராய்கிறாராமிவர். ''கௌசிக ஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசாரியர் செய்தருளிய வியாக்கியானத்தில் அந்த வரம் இன்னதென்று ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது'' என்று எழுதி அவருடைய பங்க்திகளையும் உள்ளபடி யெடுத்துக் காட்டி அதன் தாத்பரியத்தையும் (D.T.) தன் கையாலெழுதியிருக்கிறார். ''ஓயதீந்த்ரரே! நீர் வேதாந்த சாஸ்த்ரத்தின் ரஹஸ்யார்த்தமான ப்ரபத்திமார்க்கத்தை ப்ரதிஷ்டாபனம் பண்ணினீரன்றோ, அதற்காக உமக்கு ஒரு அநுக்ரஹம் செய்கின்றோம்; உமது அபிமானத்திலும் ஸித்தாந்தத்திலும் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ அடங்கின யாவரும் இந்த தேஹம் கழிந்த உடனேயே உமது ஸம்பந்தமுள்ளவர்களின் ஸம்பந்தத்தினால் முக்தி பெறட்டும்-என்றிவ்விதமான வரத்தை என்பது'' என்று. 'இவ்விதமானதுதான்வரம்' என்றுஇவர்நிராக்ஷேபமாய் ஒப்புக்கொள்ளுகிறாரா? அல்லது இதிலேயும் குற்றங் குறைகள் கூறுகின்றாரா? என்பதை அவரவர்கள் இவரை நேரில் கேட்டுத் தெரிந்துகொள்வது. ''செய்தருளிய வியாக்கியானத்தில்'' என்றும் ''ஸ்பஷ்டமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது'' என்றும் ஒன்றும்வெறுப்பின்றியே உகந்து எழுதிவிட்டபடியால் அதில் தனக்கு ஆக்ஷேபமிருப்பதாகச் சொல்ல இனி இடமில்லை, தலை விதியாய் ஒப்புக் கொண்டும் அதை நிராகரிக்கக் கொஞ்சம் மன்றாடிப் பார்க்கலாமென்று முயலுகிறார். எவ்வளவு சிரமப்பட்டாலும் மனஸ்ஸில் ருஜுத்தன்மை யுண்டாகிறவரையில் லாபமில்லையே. எழுதுகிறாரிவர்—''பக்தி அல்லது ப்ரபத்தி இல்லாவிடில் முக்தியில்லை யென்பது ஸர்வப்ரமாண ஸித்தமாய் ஸர்வாசார்யர்களும் நிஷ்கர்ஷித்த விஷயம்'' என்று. * பசுர் மநுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவ ஸம்ச்ரயா:, தேனைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம்பதம் * என்கிற வசனத்தை யறிந்திருக்கிறார், எடுத்தும் காட்டுகிறார். பொருள்தானறிந்திலர். ''ஏதேனுமொரு ப்ரகாரமாகவுமாம், ஆரேனுமொருவர் அநுஷ்டிக்கவுமாம்; ப்ரபத்திக்கல்லது ஸர்வேச்வரன் பரம புருஷார்த்தம் கொடுக்க இரங்கான்'' என்கிற வேதாந்த குருவர வாசகத்தையும் காட்டுகிறார். இதில் யாருக்கு என்ன ஆக்ஷேபம்? ''ஆரேனுமொருவர் அனுஷ்டிக்கவுமாம்'' என்பதுதானே இங்கு உயிரானவிஷயம். அதுவுமில்லை யென்று யார் சொல்வார்.

அனுஷ்டிக்கிறவதுதான் என்னவென்று நினைத்திருக்கிறாரிவர். ஸம்பாரங்கள் கொண்டுவந்து சமைக்கிற பெருங்காரியமென்று நினைத்திருக்கிறாரோ? இந்த நவீனர்களின் நெஞ்சில் அந்த மருளே ஊறிக்கிடக்கிறது. வேதாந்த குரு சரணாகதி கத்யபாஷ்யத்தின் முடிவில் இந்த மருளை வேரறுத்து எழுதியிருக்கிறார்; அதாவது,

“பகவத் க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரணாநுச்சாரண பூர்வக ஸ்வரக்ஷா பரந்யாஸே ஸித்தே, ப்ரஸாதநேஷு அஸ்மாதப்யதிகஸ்ய அபாவாத் ஸ்வீக்ருதஹர: ச்ரிய:பதிர்நாராயண:”

என்று ஸ்பஷ்டமாக எழுதப்பட்டிருக்கிறது. ரஹஸ்யத்ரயஸாரத்தில் தமிழில் எழுதினதையே அப்படியே ஸம்ஸ்க்ருதமாக்கி யெழுதினது இது. அதில் க்ருதக்ருத்யாதிகாரத்தில் “அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபை யடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே” என்று உள்ளது. அந்தத் தமிழ் வாக்யத்திற்கும் இந்த ஸம்ஸ்க்ருத வாக்யத்திற்கும் துளியாவது வாசியுண்டோவென்று பாருங்கள். இதுவே பாடமாகவன்றோ அவர் வைத்துக்கொண்டிருக்கிறார். இந்த தாதாசாரியார் ஸஜ்ஜநாராதனத்தில் (பக்கம் 74, 75ல்) அந்த தமிழ் வாசகத்திற்கு ஆச்சர்யமாக அர்த்தம் எழுதுகிறார்; எப்படியென்றால், “ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே பஞ்ச ஸம்ஸ்கார ஸமயத்தில் சிஷ்யன் த்வயோச்சாரணம் பண்ணுகிறான். அதற்குப் பிறகு [பஞ்ச ஸம்ஸ்காரம் செய்த மஹாசார்யனை விட்டொழித்து அத்ருஷ்டார்த்தத்துக்சென்று வேறோராசார்யனைத் தேடுகிற அபரவயஸ்ஸிலே] அந்த சிஷ்யன் ப்ரபத்திக்கு அங்கமாக த்வயத்தின் அநுச்சாரணம் செய்கிறான்; அதனாலே ப்ரபத்த்யனுஷ்டானம் பிறக்கிறதாக” ரஹஸ்யத்ரயஸார பங்க்திக்குப் பொருளென்று எழுதுகிறார். அழகியசிங்கர் முதலானோர் எழுதியுள்ள ஸார வியாக்கியானங்களிலும் இப்படித்தான் அர்த்தம் விவரிக்கப்பட்டிருக்கிறதோவென்று பார்க்கட்டும். அதுநிற்க. இப்படி மனம்போனபடி யெல்லாமெழுதுகிற இவரைக் கேட்பாரில்லை, அந்த தமிழ் வாக்யமே வடிவெடுத்ததாயிருக்கிற (சரணாகதிகத்யபாஷ்ய) ஸம்ஸ்க்ருத வாக்யத்திற்கும் இவர் அவ்விதமாகவேதான் வியாக்கியானம் செய்கிறாரோவென்று இவரையே நேரில் கேட்டறிக. கேட்பானேன்? அதுவேதான் கதி.

வரம் என்பதை இவர் முக்கியமாக எடுத்துக்கொண்டபடியால் அதைப்பற்றிப் பேசுவோமினி. கத்யபாஷ்யத்தில் “நித்யகிங்கரோ பவேதி ச்ருத்தவர:” என்றிருப்பதால் அந்த வரந்தான் (ச்ருத்வா வரம்) என்ற விடத்திலும் விவக்ஷிதமானவரம்-என்று முடிக்கிறாரிவர். திருக்குடந்தை சக்ரபாணிகோவிலில் ஒரு அதிகாரத்திற்காக மத்வரொருவரும் ஸ்மார்த்தரொருவரும் ஐயங்காரொருவரும் கோரியிருந்தார்களாம். அவ்வதிகாரம் கொடுக்கவேண்டிய உத்தமர் மத்வருக்கோ ஸ்மார்த்தருக்கோ கொடுப்பதாயிருந்தாராம்; அப்போது ஐயங்கார் அந்த உத்தமரிடம் சென்று “மத்வாதிஷ்வஸம்பவாத் அநதிகாரம் ஜைமினி:” என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தைக் காட்டி “ஐயா! பாருங்கள்; மத்வருக்கு அதிகாரம் ஸம்பவிக்கவே மாட்டாதென்று ஜைமினி சொல்லுகிறார்; ‘மத்வாதிஷு’ என்று ஆதிபதம் போட்டபடியாலே ஸ்மார்த்தரே ஆதிபத க்ராஹ்யர்; இனி எனக்குத்தான் ஸம்பவிக்கும் என்றாராம். அப்படியேயுள்ளது இந்த தாதாசாரியருடைய வாக்யார்த்தம். ந்யாஸதிலகத்தில் (ஜ்ஞாத்வா வரம்) என்றில்லை; (ச்ருத்வா வரம்) என்றேயிருக்கிறது. (ஆப்தபரம்பரயா ச்ராவிதம் ச்ருத்வா) என்று இவர் மதித்த வ்யாக்யாதா எழுதியுள்ளார். அப்படி ஆப்த பரம்பரையினால் கேட்கத்தக்கதேயாகும் அந்த

வரம். "ஸ்வஸம்பந்திஸம்பந்திநிஸ்தாரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்" என்று ஸாதித்த ச்ருதப்ரகாசிகாசார்யரும் ஆப்தபரம்பரையில் கேட்டே எழுதியருளினார். கௌசிக ஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசார்யரும் ஆப்த பரம்பரையில் கேட்டேயெழுதினார். அவர், வரம் இன்னதென்று ஸ்பஷ்டமாய் அருளிச்செய்திருப்பதாக இவரே எழுதிவிட்டு (பாரா 14ல்) "சேராது, வாக்யம் அந்வயிக்கவில்லை" என்று அவருக்கும் தாம்பூலம் கொடுக்கிறார். எதையும் குருமுகமாகக் கேளாதவிவர்க்கு எந்த வாக்யமும் அந்வயிக்காதுதானென்று பலகால் எழுதியிருக்கிறோம். அதையே இவர் அடிக்கடி ஊர்ஜிதப்படுத்திக்கொள்கிறார். அந்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசார்யர் அநந்விதமாக வாக்யம் எழுதுகிறவராகவேயிருக்கட்டுமே; அதனால் ஆப்தோபதேச பரம்பரையினால் அவர் தெரிவித்த ஐதிஹ்யம் பொய்யாகாதே. இவர் தமது பாண்டித்யத்துக்குத் தக்கபடி வாக்யம் அந்விதமாம்படி திருத்திக்கொள்ளட்டுமே. ஐதிஹ்யத்தை மாற்றமுடியாதன்றோ இவராலும். ஸுபாஷித நீவியிலுள்ள * பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி, ஸதோபி நைவ குணாந், விபரீதமிதம் ஸ்வஸ்மிந் மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ: * என்கிற ச்லோகம் இந்த தாதாசாரியருக்காகவே அவதரித்ததென்பது திண்ணம். இவர் இச்சிறு வியாஸத்திலும் எத்தனை அபத்தம் எழுதியிருக்கிறார் தெரியுமோ? கடைசி பக்கத்தில் "8. தேசிகனும் (உபாயத்வதியம் ருந்தே) என்றார்; (உபாயத்வம் ருந்தே) எனவில்லை" என்கிறார். இதில் உட்புகுந்து நாம் விசாரிப்பது இருக்கட்டும். (உபாயத்வதியம் ருந்தே) என்று தேசிகன் எங்கே ஸாதித்திருக்கிறார்? காட்டுவாராவிவர்? கொட்டையெழுத்தில் போட்டிருக்கிறாரே. (ஸ்வேஹாதுத்வதியம் ருந்தே) என்று அவர் ஸாதித்திருக்கிறாரேயொழிய (உபாயத்வதியம் ருந்தே) என்று ஓரிடத்திலுமில்லை. ஆசார்ய ஸ்ரீஸூக்தி இவர்க்கு நேராக வாயில் வரக்கூடாதென்று சாபமா? யாரிட்ட சாபமோ இது. அர்த்தமொன்றுதானே என்பர். அநர்த்தமும் ஒன்றுதான். (ஸாஹிலோகஹிதைஷிணீ) என்கிற ஸுப்ரஸித்த ச்லோகமும் தனக்கு நேராக வரமாட்டாமல் உருமாறினதில் கவிழ்த்தலையிட்டிருக்குமிவர்க்கு இந்த ஜன்மத்தில் தலைநிமிர ப்ரஸக்தியில்லை. அந்த கதை இஞ்சிமேட்டழகியசிங்கர் கோஷ்டியில் ப்ரஸித்தம்.

அதே கடைசிபக்கத்தில் முதல் வரியில் 'ஈட்டிலும்' என்று தொடங்கி ஈட்டு வாக்யமொன்றையெடுக்கிறார்—"ஆக இது உபாயமாகையாலே இவர்க்கு இல்லையெனலாம்" என்றிருப்பதாகக் காட்டுகிறார். * உற்றேனுகந்து பணி செய்து * என்கிற பாசுரத்தினீட்டிலிருந்து காட்டுகிறார். (உபாயமாகையாலே) என்று ஈட்டிலில்லை; (உபாயமாகாமையாலே) என்றுதானுள்ளது. இது தான் பொருந்தியதும். இது ஏற்கெனவே எடுத்துக்காட்டப்பட்டுமிருக்கிறது. எதையும் தவறாக எழுதுகிறவிவர் மஹான்களின் வாக்யங்களில் "அநந்விதம், அஸம்பத்தம்" என்றிப்படி நிந்தைகள் செய்வது தகாது தகாது தகாது. இப்படி தம் சாயம் கக்குவதையெல்லாம் கண்ணாரக் கண்டுகொண்டு ஒன்றுக்கும் ஸ்வாதந்த்ரமிடாமல் மேன்மேலும் ஸதாசார்யஸூக்தி நிந்தைகளையே செய்து போகிறார். போகட்டும்.

"அந்வயிக்காது, அந்வ்யிக்கமாட்டாது, அந்வயிக்கவில்லை" என்றிப்படி அடிக்கடியெழுதுகிறவிவரை ஒன்று கேட்கிறோம். வேதாந்தமஹாகுரு ஸாதித்த குருபரம்பராஸாரத்தில் "இவருக்கு (நாதமுனிகளுக்கு) ஸ்ரீமதுரகவிகள் முதலாக வுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்றிருக்கிறதல்லவா? இதில் (ஸாக்ஷாத்க்ருதராயும்) என்கிற உம்மை ஸரி

யாக அந்வயிக்கிறதாவென்று பார்க்கட்டும். இந்த உம்மை மற்றேரும்மையை அபேக்ஷித்திருக்குமே, அது எது? (பரம்பரையாலும்) (முகத்தாலும்) என்று கீழுள்ள வும்மைகளும் (ஸாக்ஷாத்க்ருதராயும்) என்கிற வும்மையும் ஒக்குமோ? (ஸாக்ஷாத்காரத்தாலும்) என்றிருந்தாலொக்கும். நலிந்து அந்வயித்துக்கொள்ளுகிறேமென்னில், இவர் அந்ந்வித மென்கிற இடங்களிலெல்லாம் இப்படி நலிந்து அந்வயித்துக்கொள்ளக் குறையில்லையென்றேழிக. குருபரம்பராஸாரக்ரந்தத்தின் ப்ரஸ்தாவம் வந்தபடியாலே ப்ரக்ருதத்திற்கு முக்கியமானவொரு விஷயம் எடுத்துரைக்கலாகிறது. அதுதான் அடுத்த விஷயம். .... .... .... *

---

## 5. ப்ரபத்தியனுஷ்டான விளக்கம்*

குருபரம்பராஸாரத்தில் "எம்பெருமானர் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்; திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழி கேட்டார்; ஆளவந்தாராழ்வார் ஸ்ரீ பாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ரமும் அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினர். திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே ஸ்ரீமத்ராமாயணம் கேட்டருளினர்" என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்தாரென்று முன்னமே சொல்லிவிட்டார். இப்படி ஒவ்வொன்றுக்கு ஒவ்வோராசார்யரைக் காட்டினவர் (இன்னாரிடத்திலே அத்ருஷ்டார்த்தம் செய்துகொண்டார்) என்று ஒரு வரி யெழுதியிருப்பதுண்டோ? வேறு எந்த ஆசார்யரைப் பற்றியாவது முன்னேருரைகளில் இப்படி யொருவரி எழுதியிருக்கக் கண்டதுண்டோ? இந்த அநுஷ்டானம் எந்நாள் தொடங்கி எவர் தொடங்கி எதற்காகப் போந்ததென்பதை யாமறியோம். அதில் விவாதமேயில்லை. ஆந்த்ர தேசங்களில் "ரஹஸ்யத்ரயோபதேசம் பெற்றால் போராது; சரமரஹஸ்யத்ரயமென்று ஒன்றுண்டு; அதுவும் உபதேசம் பெற்றால்தான் மோக்ஷமுண்டு; அதற்கான அனுஷ்டானங்கள் இன்னின்னவை" என்றெரு ப்ரசாரம் பலவருஷங்களாய்ப் பரவி வருகிறது. அதுபோலே இந்த அத்ருஷ்டார்த்தாநுஷ்டானமுமிருக்கட்டுமே. தடைசெய்வாரார்கொல்?

இந்த D. T. தாதாசாரியாருக்கு முக்கியமான எச்சரிக்கை. ப்ரபத்தி விஷயத்தில் வேதாந்த குருவின் ரஹஸ்ய த்ரயஸார க்ருதக்ருத்யாதிகார ஸ்ரீஸூக்தியையே அதாவது— "அனாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான ஸஹவத்க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்தபின்பு சரண்யப்ரஸாதநங்களில் இதுக்கு மேலொன்றில்லாமையாலே" என்கிற ஸ்ரீஸூக்தியை நாம் பலகால் எடுத்துக்காட்டி இவ்விஷயத்தில் இந்த நவீனர்கள் வாய் திறக்க வழியில்லாதபடி செய்திருக்கிறேம். இவ்விஷயம் இருபது முப்பது வருஷமாக நமது க்ரந்தங்களில் சர்ச்சிக்கப்பட்டு வந்திருக்கிறது. இதைப்பற்றி இதுவரையில் ஒருவர் கூட ஒன்றும் பேசினதில்லை. மற்றவர்களைப்போல் மௌனவ்ரதராக வாளாவிருந்து விடாமல் இந்த தாதாசாரியார் இதற்கு பதில் எழுத எழுந்து "த்வயோச்சாரணநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்ததாக தேசிகன் சொல்லிவிட்டதனலே என்ன முழுகிப்போய்விட்டதென்றும், ப்ரபவ வருஷத்தில் ஆசார்யன் த்வயோச்சாரணம் பண்ண, நந்தன வருஷத்தில் சிஷ்யன் [மந்த்ரோபதேஷ்டாவான முந்திய ஆசார்யனைத் தள்ளி வேறோராசார்யனிடத்திலே] செய்கிற அநூச்சாரணத்தைத்தான் அந்த தேசிகன் வாக்கியம் சொல்லுகிறதென்றும்,

ஆகவே ஸமாச்ரயண காலத்திலேயே ப்ரபத்தி அநுஷ்டிக்கப்பட்டு விட்டதாக தேசிகனுடைய திருவுள்ளமல்லவென்றும் எழுதி க்ருதக்ருத்யராய்விட்டார். ஒரு ஸதாசார்யனிடத்தில் காலக்ஷேபம்செய்திருந்தால் இப்படி அபார்த்தம் செய்ய ஒருவர் துணிவரா? சற்றுமுன்னே எடுத்துக்காட்டியிருக்கிற மத்யபாஷ்ய ஸ்ரீஸூக்தியைக் கண்டபின் இவரே ஒடுங்கி நிற்பர். அபார்த்தம் செய்ததற்கும் அதை கொஞ்சமும் கூசாமல் வெளியிட்டதற்கும் அநுதபித்து "ஹநூநிஜே பளபளாத்காராஞ்சனைஸ் ஸம்ஸ்க்ரியாத்" என்ற கட்டளையையும் நிறைவேற்றுவர்கள் பிராமாணிகர்கள். சக்ரவர்த்தி திருமகனர் "மச்சாநுஜாநாமி ஆச்வாஸ்ய நிர்யாஹி" என்று ஸாதித்துங்கூட திருவுள்ளமறியாமல் மறுபடியும் போர்புரிய வந்த ராவணனைப்போல இனியும் பார்த்த ஸ்தாபனத்திற்கே வழிதேடுவராகில், மேலே காட்டின க்ருதக்ருத்யாதிகார வாக்யத்திற்கு இவரெழுதினது அபார்த்தமன்று, ஸதர்த்தமேயென்று ந்ருஸிம்ஹப்ரியாவில் நாலு வித்வான்கள் (வ்யபதிஷ்டரானவர்கள்) எழுதட்டும். அந்த கதை எது? .... *

## 6. இயேஷ பதப்ரயோஜந விமர்சம்

நந்தனஹூ மார்கழிமாத ந்ருஸிம்ஹ ப்ரியாவில் 'இயேஷ பதப்ரயோஜனம்' என மகுடமிட்டவோர் சிறு வியாஸம் ஒரு தாதாசார்யரால் எழுதப்பட்டு வெளிவந்திருக்கிறது. வைதிகமநோஹரா (65 பத்ரிகையில் "[illegible]?" என்ற நம் வியாஸம் வெளி வந்ததே; அதற்கு மறுப்பாமிது. சித்திரகூடத்தில் பெருமாள் பரதாழ்வானுக்குத் தந்தருளின பாதுகை அயோத்தியிலிருந்து பெருமாள் எழுந்தருளும்போது தம் திருவடிகளில் சாத்திக் கொண்டு வந்தது என்கிற சிலருடைய வாதம் தவறு; பரதாழ்வான் தான் போகும்போது கொண்டுபோன ஆபிஷேசநிகபாண்டத்தில் பாதுகையும் சேர்ந்தது—என்று நிரூபண நிபுணர்களான மஹான்களின் திருவுள்ளம். இதனைக் கண்டிக்க வெழுந்த 'இயேஷபதப்ரயோஜநம்' என்னும் வியாஸம் அஸங்கதமாக வெழுதிற்று. பாதுகாஸஹஸ்ரே ஸஞ்சாரபத்ததியில் "[illegible]" என்கிற ச்லோகமிருக்கிறதாம். இதில் பிராட்டியானவள் குசகண்டக மர்தனமாகிற பாதுகா வ்ருத்தியைச் செய்தாளென்று சொல்லாமல் அந்த வ்ருத்தியை ஆசைப்பட்டாள் என்று சொல்லியிருக்கையாலே, பிராட்டி ஆசைப்பட்ட மாத்ரமேயொழிய அந்த ஆசை நிறைவேறவில்லை யென்று ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறதாம். ஏன் நிறைவேறவில்லையென்றால் குச கண்டகமர்த்தனத்தைப் பாதுகையே செய்து போந்தபடியாலே அந்த கைங்கரியம் பிராட்டிக்கு ப்ராப்தமாகாமல் போய்விட்டதாம். இதைத் தெரிவிப்பது தான் இயேஷ பதப்ரயோஜனமாம். பண்டிதரென்று பெயர் வஹிப்பவரொருவர் இப்படி யெழுதினது சோசநீயம். 'அக்ரதஸ்தே கமிஷ்யாமி' என்று பிராட்டி சொன்னது காட்டிலன்று. அயோத்தியில் வநப்ரஸ்தாந ப்ரஸ்தாவம் வந்தபோது சொன்னது. அந்தச் சொல்லையிட்டு ச்லோகமியற்றுகிற ஆசிரியர் (இயேஷ) என்னுமல் (அகார) என்று எப்படி சொல்ல முடியும். இச்சித்த ஸமயத்தில் தோன்றின வார்த்தையை அநுவதித்தபோது இச்சித்தாளென்றல்லது வேறு சொல்லமுடியாதன்றோ.

ஸ்ரீராமாயண ஸுந்தரகாண்டத்தின் முதல் ச்லோகம் "ததோராவணநீதாயாஸ் ஸீதாயாச் சத்ருகர்சந:. இயேஷ பதமந்வேஷ்டும்" என்றிருக்கிறது. இங்கு இயேஷ என்று சொல்லியிருப்பதால் ஸீதையைத் தேட இச்சித்தது மாத்திரமேயொழிய அந்வேஷணகார்யம் நிறைவேறவே யில்லை யென்று இந்த பண்டிதர் ப்ரஸங்கம் செய்வர்போலும். இப்படி அபார்த்தம் செய்வது மிகத் தவறு. * அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குசகண்டகாந் *

என்ற ஸீதாவசனத்தின் உண்மையான கருத்தை இப்பண்டிதர் க்ரஹித்தவருமல்லர். ஸதாசார்ய ஸந்நிதியில் சிரமப்பட்டுக் கேட்டுணர வேண்டிய அவ்வர்த்தத்தை இங்கு வெளியிடக் கூடாதாயினும் சிறிது வெளியிடுகிறோம். "ராகவா! எந்த காரியத்தை உத்தேசித்து நீர் காட்டுக்குப் புறப்படுகிறீரோ அந்த காரியம் நிறைவேற வேண்டுமிடத்திற்கு உமக்கு முன்னே நான் சென்று சேரக்கடவேன்" என்கிறாள் பிராட்டி. 'குசகண்டகாந்' என்பதற்கு தர்ப்பமும் முள்ளும் அர்த்தமன்று. லோக கண்டகர்களான ராவணாதி ராக்ஷஸர்களே அர்த்தம். பெரியாழ்வார் "கான் தொடுத்த நெறிபோகிக் கண்டகரைக் களைந்தானூர்" (4—8—4) என்ற பாசுரத்தில் இவ்விசேஷார்த்தத்தைக் காட்டியிருக்கிறார். பெருமாள் செய்தருள நினைத்த குசகண்டக மர்தநத்தை அவர்க்கு முன்னமே பிராட்டி தான் செய்ய நினைத்து அது செய்யவேண்டு மிடமான லங்கையில் அவர்க்கு முன்னமே தான்சென்று வீற்றிருந்தாள். ஆகவே அவளாசைப்பட்டது நிறைவேறாமற்போகவில்லை.

அது எப்படியாவது இருக்கட்டும். ரஸ்யாஹஸ்யார்த்தத்திற்கு இவர்கள் அத்யந்த தூரஸ்தர்கள். இயேஷபதப்ரயோஜன மென்றே மகுடமிட்டு இவர் காட்டினது அநிபுண பணிதியென்று முடிக்கப்பட்டது. "ராமேண ஸஹ மந்தும் இயேஷ ஸீதா" என்றால், பெருமாளோடு கூட புறப்பட்டுச் செல்லப் பிராட்டி ஆசைப்பட்டாளே யொழிய, சென்றாளல்லள்; சென்றிருந்தால் இயேஷ என்ன மாட்டாரன்றோ—என்கிற அசட்டுவார்த்தைக்கும் இவருடைய வார்த்தைக்கும் சிறிதேனும் வாசியுண்டோ?

தவிரவும் சில ஸ்ரீராமாயண ச்லோகங்களை உதாஹரிக்குமிவர் தப்புப்பாடமாகவே உதாஹரிக்கிறார். "ப்ராணஷ்ட ஜநஸம் பாயம்" என்று காட்டுகிறார். (ப்ராணஷ்ட) என்கிற பதம் ஸம்ஸ்க்ருத பாஷையில் கிடையாது. (ப்ரநஷ்ட) என்று நகார ஸஹிதமாகத்தானுள்ளது. 'நமோ:ஷாதுவஸ்தோ' என்று வியாகரண ஸூத்ரம். "ஆர்ஷத்வாந் நதோஷ:" என்று சொல்வதற்காக இல்லாத அபத்தங்களை ஏறிடுவாருமுண்டோ? இதற்காக ஒரு அபத்த புஸ்தகத்தைத் தேடி யெடுத்துக்காட்ட ப்ரயாஸப்படவேண்டா. .... .... (6)

---

இடையில் ஒரு அவதாரிகை; எதற்காக? 7, 8, 9 அர்த்த விசேஷங்களுக்காக. ஸ்ரீராமாநுஜன் 147ல் "வதந்தியில் செவிப்பட்ட வானமாமலைச் செய்தி" என மகுடமிட்ட வியாஸத்தில் அஹோபில ஜீயர் வானமாமலைக்குச் சென்றிருந்தபோது அங்கு ஒரு பிரசங்க மேடையில் ஈடு முப்பத்தாறாயிரப்படி வடகலை சம்பிரதாயத்திற்கே யொத்ததென்று பேசியதாக நாம் தெரிவித்து அது அஸம்பத்தமான வார்த்தை யென்பதை உலகம் தெரிந்துகொள்ளச் சில நிரூபணங்களைச் செய்திருக்கிறோம். ப்ராஜ்ஞர்கள் அதை மறுபடியும் வாசித்துப் பார்ப்பது. அது தவிர முக்கியமானதொரு விஷயம் இங்குத் தெரிவிக்கப்படுகின்றது. அஹோபிலமடத்து ஆஸ்தான வித்வானாயிருந்த புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியரென்பவர் "ஈட்டின் விமர்சம்" என்றொரு சிறு சுவடியை யெழுதி அதில் ஈடு முப்பத்தாறாயிரப்படியிலிருந்து சில ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டி தத்வஹித புருஷார்த்தங்களை நிர்ணயிக்கப் புகுவதாக எழுந்தார். அது முழுவதும் அஸ்தாநே ப்ரஸங்கமென்று அப்போதே நம்மால் விவரிக்கப்பட்டிருந்தும் ஜீயர் அதைக்காணாதவர்போல் வானமாமலையிற் சென்றபோது ஏதோ பேசியிருக்கிறார். தலைகாட்டப்பெறாமல் முடிந்துபோன விஷயங்களையே அவற்றுக்கு இன்னும் உயிரிருப்பதாக வைத்துப்பேசுவதுமெழுதுவதும் இவர்களுடைய இடல்பு. இதைப் பற்றியே அடுத்த மூன்று விஷயங்கள் வெளி வருகின்றன. (இத்யவதாரிகா.)

---

## 7, 8, 9. ஈட்டில்நோக்ட ப்ரமங்களுக்குப் பரிஹாரங்கள்.

"இம்மிதுனமே ஜகத்துக்கு சேஷியென்கிறார்" என்றும் "சேஷித்வத்துக்கு எல்லை இம்மிதுநமாயிருக்கிறப்போலே" என்றும் "உபயவிபூதியும் ஒரு மிதுனத்துக்கு சேஷமிறே" என்றும் இப்படி பல வாக்யங்களை யீட்டிலிருப்பதாக எடுத்துக்காட்டுகிறார். இவற்றால் இவர்க்கு என்ன லாபம்? பிறர்க்கு என்ன நஷ்டம்? என்பதுதான் தெரியவில்லை. சேஷீ என்பதற்கு கைங்கர்யம் கொள்பவர் என்று பொருள். சேஷன் என்பதற்கு கைங்கரியம் செய்பவன் என்று பொருள். உபயவிபூதியும் திவ்யதம்பதிகளுக்குக் கைங்கரியம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறது என்பதிலும், திவ்ய தம்பதிகளாகிற மிதுனம் உபய விபூதியும் கைங்கரியம் செய்ய அமைந்தது என்பதிலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் யாருக்காவது ஆக்ஷேபமுண்டோ? ஈட்டை ப்ரமாணமாக இசையாத மதாந்தரஸ்தர்களின் வ்யாமோஹத்தைக் குலைப்பதற்காக இப்பண்டிதர் க்ரந்தமெழுதப்புகுந்தவராயின் அன்னவர்களுக்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டுவதனால் ஈஷத்தும் பலனில்லை. ஈட்டைப் பரமப்ரமாணமாகக் கொள்பவர்கள், மேலேகாட்டின ஸ்ரீஸூக்திகளுக்கு வேறு வகையான பொருள் காண்பவர்களல்லர். மிதுநம் ஸர்வஜகச் சேஷியென்பதிலும், ஸர்வஜகத்தும் மிதுநசேஷமென்பதிலும் ஒரு வைஷ்ணவராவது விவாதப்படுவதுண்டோ? இல்லையே. எதற்காக இவருடைய வீண் ஸம்ப்ரமம்?

* பொன்னுலகாளீரீட்டில்—"இருவரும் கொடுக்கலாம்படி ஒரு மிதுநத்துக்கு சேஷமாயிறே உபயவிபூதியுமிருப்பது" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை யெடுத்துக்காட்டுகிறார். பிராட்டி மோக்ஷம் கொடுக்கமாட்டாதவள் என்று யாரும் சொல்லவில்லை, நினைத்திருக்கவுமில்லை. பட்டர் * ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசிதஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய * என்று ஸ்பஷ்டமாகவே ஸாதித்திருக்கவில்லையோ? இராமானுச நூற்றந்தாதியில் * ஞானங்கனிந்த நலங்கொண்டு * என்கிற பாசுரத்தில் "இராமானுசன், தன்னையெய்தினர்க்கு அத்தானங்கொடுப்பது தன்தகவென்னும் சரண்கொடுத்தே" என்று எம்பெருமானார்க்கும் மோக்ஷப்ரதத்வமுண்டென்று முக்தகண்டமாகச் சொல்லியிருக்கவில்லையோ? எம்பெருமானார்க்கு உள்ளதென்றிசைந்த இந்த மோக்ஷப்ரதத்வம் பெரியபிராட்டியார்க்கு உள்ளதென்றால் யாரோ ஸஹியாதார்? எம்பெருமானார்க்கு மாத்திரமேயன்று; அஸ்மதாசார்ய பர்யந்தையான குருபரம்பரையில் நிவிஷ்டர்களான ஸகல ஆசார்யர்களுக்கும் மோக்ஷப்ரதத்வம் ஸம்ப்ரதிபந்நமாயிருந்தது. இது பிராட்டிக்கு கைமுதிகந்யாயஸித்தம். அவளும் குருபரம்பரையில் அந்வயித்தவளேயன்றோ.

பகவத்ராமாநுஜாதிகளுக்குச் சொல்லப்படுகிற மோக்ஷப்ரதத்வத்தை ஒருவாறு நிர்வஹித்துக்கொள்ளுகிறோமென்னில், பிராட்டிக்குச் சொல்லப்படுகிற மோக்ஷப்ரதத்வத்தையும் அவ்வாறே நிர்வஹித்துக்கொள்ள என்னகுறை? "த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநியாய்" என்று ஈட்டிலருளிச் செய்திருக்கிறாராம். இல்லையென்று யார் சொன்னது? ஸர்வஸ்வாமியான தேவதேவனுக்கு திவ்யமஹிஷியானபோதே அவள் ஸர்வஸ்வாமிநியாகவில்லையோ? இதில் யார்க்கு என்ன விப்ரதிபத்தி?

* வேரிமாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்குமே யென்றவிடத்தில் ஆறாயிரப்படியில் "இத்திருவாய்மொழி வல்லாருடைய ஸமஸ்த துக்கங்களையும் பெரிய பிராட்டியார் போக்கு

மென்கிறார்'' என்றுள்ளதாம். பக்தர்களின் துக்கங்களைப் போக்குவதில் பிராட்டிக்கு சக்தியில்லையென்று யாரேனும் நினைத்திருப்பதுண்டோ? ஸ்ரீசப்த நிர்வசனத்தில் கண்டபொருள் தானேயிது. இவ்விடத்து ஈட்டில் "ஸர்வேச்வரன் பலன் கொடுக்கிற தசையில் அவனை விலக்கி நானே இதுக்குப் பலன் கொடுக்கவேணுமென்று பகவதனுபவ விரோதியான ஸகல ப்ரதிபந்தங்களையும் பிராட்டிதானே போக்கும்'' என்று இருக்கிறதாம். இல்லையென்று யார் சொன்னது? அடியார்கள் திறத்து எம்பெருமானுடைய வாத்ஸல்யத்திற்காட்டிலும் பிராட்டியின் வாத்ஸல்யம் கனத்ததென்று காட்டுகிற விந்த ஸ்ரீஸூக்தியில் யார்க்கு என்ன விப்ரதிபத்தி? "ஆயிரத்துள்ளிவை பத்தும் கெடலில் வீடு செய்யும் கிளர்வார்க்கே'' என்றுகூட ஆழ்வார் ஸாதிக்கிறார். அசேதனமான சப்தராசியே மோக்ஷப்ரதானம் பண்ணுவதாக இதில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது. இது ஸம்பாவிதமாகும்போது, தலைசிறந்த சைதந்யமுடைய பிராட்டிக்கு இது அஸம்பாவிதமென்று யாரே உரைப்பார்? ஸ்ரீமானான நாராயணனே பரதத்வமென்று ஈட்டில் ஸாதித்திருக்கிறாராம். ப்ரஹ்மசாரிநாராயணனே பரதத்வமென்று ஸ்ரீ வைஷ்ணவகோஷ்டியில் சொல்லுவர்ராரோ அறியோம்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மியானவள் ஜீவகோடியில் சேர்ந்தவளல்லள் என்று ஸ்தாபிக்க இப்பண்டிதருடைய ஸம்ப்ரமம் ப்ரபலமாகவுள்ளது. இப்பண்டிதர்க்கு நாம் ஸௌமநஸ்யத்துடன் சிலவுண்மைகளை யுரைப்போமிங்கு. பிராட்டிக்கு ஈச்வரகோடியில் அந்தர்ப்பாவமில்லையென்றோ ஜீவகோடில் அந்வயமில்லையென்றோ பூர்வாசார்யர்களில் ஒருவரும் ஆக்ரஹித்திருக்கவில்லை. வடக்குத்திருவீதிப்பிள்ளை திருக்குமாரர் முமுக்ஷுப்படியிலே, "பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப் போலே ப்ரதமசரமபதங்களை விடாதேயிருக்குமிருப்பு'' என்றருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். ப்ரணவத்தில் ஈச்வரவாசகமான அகாரத்திலும் ஜீவவாசகமான மகாரத்திலும் பிராட்டியைச் சேர்த்து அர்த்தமருளிச் செய்திருப்பது ப்ரமாணயுக்திகளுக்கு மிகப்பொருந்திய நிரவத்ய ஸம்ப்ரதாயம். * ஈச்வரீம் ஸர்வபூதாநாம் * இத்யாதி ப்ரமாணத்தை அபலபிப்பாராருமில்லை ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் வேதாந்த வாசிரியர் பணிக்கும் ஜீவலக்ஷணம் பிராட்டி பக்கலிலும் ஸமந்விதமாகிறபடியை மறுக்க வல்லாராருமில்லை. அவ்விடத்தில் வியாக்கியானம் செய்த தசோபநிஷத்பாஷ்யகாரர் "லக்ஷ்ம்யா ஜீவாஸஹாவ வலக்ஷணநதோஷ:'' என்று பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்வயம் சொல்லுகிற பக்ஷத்தை ஆமோதித்திருப்பதும் சாஸ்த்ரஜ்ஞ கோஷ்டியில் ஸுப்ரதிபந்நமானது.

பிராட்டியை ஜீவகோடியில் சேர்த்துப் பேசுவதனால் அவளுக்கு ஒரு குறையும் வந்துவிடாது. ஸர்வேச்வரனொருவன் தவிர மற்ற ஸகலாத்மாக்களுக்கும் அவள் ஈச்வரியாயிருக்குமிருப்புக்கு ஒரு ஹாநியும் வாராது. ஸாக்ஷாத் ஸர்வேச்வரனும் ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் செய்து போந்து ஜீவகோடியிலேயே பரிகணிக்கப்படுகிறான். * ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:, அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: * என்று கூறுகிற வான்மீகி முனிவர்தாமே * ஜ்ஞாது மேவம்விதம் நரம் * என்கிறார்; * அப்யஹிஞ்சந் நரவ்யாக்ரம் * என்கிறார். முனிபுங்கவரான நாரதரும் * தைர் யுக்தச் ச்ருயதாம் நர: * என்கிறார். * ஸ உ ஸ்ரேயாந் பவதி ஜாயமாந: * என்று மறையறைகின்றது. அஜாயமாநனுக்கு ஜாயமாநத்வமும்; தேவதாஸார்வபௌமனானவனுக்கு மநுஷ்யத்வமும், பரமசேதநனானவனுக்கு சேதநகோடி பரிகணநையும் ஈஷத்தும் அவத்யாவஹமாகிறதில்லையென்று காண்கிறோம்.

நித்ய விபூதியைச் சிலர் ஜடமென்றும், சிலர் அஜடமென்றும் சொல்லாநின்றார்கள். தத்வமுக்தாகலாபத்திலே "ஊஹ ஜயாஜாஜிஜா கெஜிஷாஹ:" என்றுள்ளதே. ஜடமென்பார்க்கு நித்யவிபூதியிடத்தில் பகையிருப்பதாகக் கேள்விப்படுகின்றிலோம். ஸர்வேச்வரன் தானும் ஸேனாபதியாழ்வான் பிரம்பின்கீழே வளர்வானாகப் பேசப்படுகிறான்; அப்படி ஸர்வேச்வரனையும் நியமிக்க வல்லவனான ஸேநாபதியாழ்வானுக்கு ஈச்வரகோடியில் பரிகணனையில்லாமையும் சேதந கோடியில் பரிகணனையிருப்பதும் அவத்யாவஹமென்று கண்டிலோம். * ஆசார்யாதிஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே * என்று வேதாந்த மஹாகுரு பணித்த கட்டளையிலே ஸர்வேச்வரனிலும் விஞ்சிய வைபவசாலிகளான ஆழ்வாராசார்யர்களுக்குள்ள ஜீவகோடி பரிகணனைக்கு அருவருப்புக்கொள்வாராருமில்லை. ஆக, பிராட்டியை ஈச்வரகோடியில் சேர்த்துப் பேசுவாரை யாரும் பழிக்கவேண்டா; அப்படியே அவளை ஜீவகோடியில் சேர்ந்தவளாகச் சொல்லுவாரையும் பழிக்கவேண்டா. பூர்வாசார்யர்களில் இதில் ஸ்பர்த்தை பண்ணினாருமிலர். ஸ்வரஸவாஹியாகப் பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்தர்ப்பாவமே ஸகல பூர்வாசார்ய ஸம்மதமென்பது நிர்விவாதம். ஜீவலக்ஷணமான தாஸ்யத்திற்குப் பிராட்டிதிறத்தில் அஸம்பவமோ அவ்யாப்தியோ சொல்லவொண்ணாதே. இந்த நமது பண்டிதர் நினைக்கிறபடி இவர் தமக்கு ஆதாரமாக நம்பிள்ளையீட்டில் ஓர் அக்ஷரமுமில்லையே. எது கொண்டு இந்த வாதத்தைக் கிளப்பினாரிவர்?

## உபயவேளைகளிலும் ஒரு மிதுனமே உத்தேச்யம்.

"ஆச்ரயண வேளையோடு போகவேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யம்" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்தி இவர்களை மோஹிப்பிக்க அணுமாத்ரமும் அவகாசமில்லை ஸாரஸம்க்ஷேபமாக இங்குத் தெரிவிக்கிறோம். (ஆச்ரயண வேளையோடு ஹோமவேளையோடு வாசியற) என்பதற்கு என்ன அர்த்தம்? ஆச்ரயண வேளையிலும் ஹோமவேளையிலும் என்பது தவிர வேறு அர்த்தமில்லையன்றோ. இவ்விரண்டு வேளையிலும் பிராட்டியை உத்தேச்யமாகக் கொள்ளாதாருண்டோ? ஆச்ரயண கர்மீபாவம் (த்வயத்தில்) பிராட்டிக்கு இல்லையென்று நெஞ்சாலும் நினைக்கமுடியாதே. த்வயவிவரணமான சரணாகதிகத்யத்திலே * பகவந்நாராயணேத்யாதி சூர்ணையாலே முந்துறமுன்னம் ஸ்ரீமஹாலக்ஷ்மீஸமாச்ரயணமேயன்றோ நிபந்திக்கப்பட்டது. பட்டரும் அஷ்டச்லோகியில் *ஈசாநாம் ஜகதாம் அதீச தயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய* என்று பிராட்டியாச்ரயணத்தை முன்னம் அருளிச்செய்தன்றோ பின்னை * இஷ்டோபாயதயா அங்க்ரீ ஹரோராச்ரயே * என்றார். ஆகவே ஆச்ரயண வேளையில் பிராட்டிக்கு உத்தேச்யத்வம் பேர்க்கவும் பேராதேயென்னும்படியிருக்க, இதை உள்ளபடியருளிச்செய்திருக்கிற நம்பிள்ளை ஸ்ரீஸூக்தியில் யார்க்கு என்ன வைமத்யம்? இந்த பண்டிதர் அதில் என்ன விசேஷம் கண்டாரோ அறியோம். எம்பெருமானை உபாயதயா ஆச்ரயிப்பது போலப் பிராட்டியையும் உபாயதயா ஆச்ரயிக்கவேண்டாவோவென்றும், பிராட்டியைப் புருஷகாரதயா ஆச்ரயித்து எம்பெருமானை உபாயதயா ஆச்ரயிப்பதாகிற வைஷம்யம் பண்ணலாமோ வென்றும் க்ஷேபிப்பதே இப்பண்டிதருள்ளத்திலுறைந்திருப்பது. த்வய விவரணமாக வேதாந்தகுரு பணித்த ரஹஸ்யங்கள் ஒன்றிரண்டல்லவே. பலவுண்டே. ஒன்றிலாவது 'பிராட்டிக்குப் புருஷகாரதயா ஆச்ரயணமில்லை, உபாயதயைவ ஆச்ரயணம்' என்று பேசியிருப்பதுண்டோ? உண்டாகில் எடுத்துக்காட்டலாமே. ஒரு வ்யக்திக்கே புருஷகாரதயா ஆச்ரயணமும் உபாயதயா ஆச்ரயணமுமாகிற விரண்டும் கூடுகை தேஜஸ்திமிர ஸாமாநாதிகரண்யம்போலே

அஸம்பாவிதமென்று நாம் பல்கால் உபபாதநம் பண்ணியிருப்பதற்கு வாய் திறந்தவர்களோ இவர்கள். உபாயத்வத்தை வ்யாஸஜ்ஜ்ய வ்ருத்தி தர்மமாகக் கொள்ளுகிறோமென்னில், புருஷகாரத்வத்தையும் அப்படி கொள்ள முடிந்தால் இதையும் அப்படிக் கொள்ளலாம்.

பண்டிதர் எழுதுகிறார்—“இங்கு வாசியற என்கிற வாக்கியம் பேதமில்லாமல் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது” இத்யாதி. வடமொழியிற்போலவே தென்மொழியிலும் அவகாஹனமில்லாமை விளங்கிற்று. “ப்ராஹ்மணர்களோடு க்ஷத்ரியர்களோடு வைச்யர்களோடு, சூத்ரர்களோடு வாசியற எல்லாரும் எம்பெருமானைத் துதிக்கக் கடமைப்பட்டவர்கள்” என்று ஒரு வாக்யம் கண்டால் இதில் யாரும் யாதோரவத்யமும் சொல்ல முடியாது. ஆனால் வேதவாக்யங்களைக்கொண்டு துதிக்கவல்ல த்விஜர்களைப் போலவே சூத்ரர்களும் அப்படியே—வேதவாக்யங்களைக்கொண்டே துதிக்கக் கடமைப்பட்டவர்கள் என்கிற போதத்தை இவ்வாக்கியம் தருவதனால் இது அஸம்பத்தார்த்த ப்ரதிபாதகம் என்று ஒருவன் தூஷிக்க முடியுமாவென்று பாருங்கள். நமது பண்டிதர் (வாசியற) என்பதன் இயற்கைப் பொருளை அறியப் பெறாதவராகையாலே இங்கு தூஷிக்க முடியுமென்றே சொல்லக்கடவர். இவரைத் தெளிவிக்கிறோமினி. மேலே குறித்த வாக்கியம் “ப்ராஹ்மணர்களோடு க்ஷத்ரியர்களோடு வாசியற எல்லாரும்” என்றிவ்விதமாக இராமல் “ப்ராஹ்மணர்களும், க்ஷத்ரியர்களும், வைச்யர்களும், சூத்ரர்களுமாகிய எல்லாரும் எம்பெருமானை வாசியறத்துதிக்கக் கடமைப்பட்டவர்கள்” என்றிங்ஙனே இருந்திருக்குமாகில் அப்போதுதான் இது தவறான கருத்தைத் தந்து தூஷணீயமாகும். வாக்யமோ அப்படியில்லை. “ப்ராஹ்மணர்களோடு............சூத்ரர்களோடு வாசியற” என்றேயிருக்கிறது. (வாசியற) என்பது மேலே க்ரியையில் அந்வயிப்பதன்று. “ப்ராமணர்..........சூத்ரர் என்று வாசிகாணவேண்டாதபடி எல்லாரும்” என்றிவ்வளவே பொருள் பட்டு நிற்கும். இவர்கள் துதிப்பதில் வாசியுண்டா இல்லையா என்கிற விசாரமும் அதற்கொரு முடிவும் இந்த வாக்யத்தில் ப்ரஸக்தமாகவேமாட்டாது.

இவ்வண்ணமாகவே “ஆச்ரயண வேளையிலும் போக வேளையிலும் வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யம்” என்று சுட்டுப்பங்க்தி இருந்திருக்குமாகில் அப்போது நமது பண்டிதருடைய வாதம் வெற்றிபெற்றே தீரும். பங்க்தியோ அப்படியில்லை. “ஆச்ரயணவேளையோடு போகவேளையோடு வாசியற” என்றேயுள்ளது. “இரண்டு வேளைகளிலும்” என்றிவ்வளவே பொருள்பட்டு நிற்குமிங்கு. (வாசியற) என்பதை மேலே கொண்டுபோய் உத்தேச்யதையில் அந்வயிப்பதானால் “ஆச்ரயண வேளையோடு போகவேளையோடு” என்ற ஒடுகள் அந்வயமற்று மொட்டையாய் நின்றொழியும். இந்த மருமத்தைத் தெரிந்துகொள்ள அதிகமான படிப்பு அபேக்ஷிதமன்று. துரபிநிவேசம் தொலையவேண்டுமத்தனை.

“கைங்கர்யதசையில் எப்படி இருவருமான சேர்த்தி உத்தேச்யமோ, அப்படி ஆச்ரயண தசையிலும் இருவருமான சேர்த்தியே உத்தேச்யம்” என்று பங்க்தியிருந்தாலும் இதிலும் அவத்யலேசமும் பேசப்போகாது. மதுப்பின் அர்த்தமாயும் வஸ்துஸ்திதியில் உள்ளதாயுமிருக்கிற நித்யயோகத்தைக் கண்ணழிப்பாரார்? பட்டர் [அஷ்டச்லோ. 5.]* நேத்ருத்வம் நித்யயோகம் ஸமுசிதகுணஜாதம் தநுக்யாபநஞ்ச உபாயம் * என்று பேதையரும் தெளிவு பெறும்படியருளிச் செய்திருந்தும் நமது பண்டிதர் தெளிவு பெறாதொழிவதே!

மிக முக்கியமான விஷயமொன்று உணர்த்துகிறோமிங்கு. ச்ருதியில் * ஐதம் விபணௌ—ருதம் பிபந்தௌ * என்பதொருவாக்கியம். கருமபலனை யனுபவிப்பவர்கள் என்று இதற்குப் பொருள். இங்கு த்விவசநம் ஜீவாத்ம பரமாத்மபரம் என்று ஸ்ரீபாஷ்யகாருடைய நிர்ணயம். கர்மபலாநுபவம் ஜீவனுக்கு மாத்திரமுள்ளதேயன்றிப் பரமபுருஷனுக்குக் கிடையாது. ஆனால் ச்ருதியானது (ஐதம் விபணௌ) என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதால் இருவர்க்குமே அஃதுள்ளதாகப் புலப்படுகின்றது. இது எப்படி பொருந்துமென்கிற சங்கையும் அதற்குப் பரிஹாரமும் அத்த்ரதிகரண ஸ்ரீபாஷ்யத்திலுள்ளது. ஸதி ந்யாயேந (சத்ரிந்யாயேந) பொருந்துமென்று ஒரு ஸமாதானம். கர்ப்பலபோகத்தில் ஜீவாத்மாவுக்கு ப்ரயோஜ்ய கர்த்ருத்வமும், பரமாத்மாவுக்குப் ப்ரயோஜக கர்த்ருத்வமுமாகக் கொண்டு பொருந்த விடலாமென்பது மற்றொரு ஸமாதானம். இதைப்பற்றின வைசத்யம் ச்ருதப்ரகாசிகையிற் காணலாம். கர்ம பலானுபவம் ஜீவபரர்களுக்கு வாஸ்தவமாய் ச்ரூயமாணமாயிருக்கச் செய்தேயும் உபபத்தியை நோக்கியே இப்படி பொருளுரைக்க ப்ராப்தமாகிறது. ஆச்ரயண தசையில் திவ்ய தம்பதிகளுக்குள்ள உத்தேச்யத்வமும் உபபத்திக்குப் பொருந்த நிர்வாஹ்யமேயல்லது அநுபபத்திக்ரஸ்தமாக ஒருகாலும் நிர்வாஹ்யமாகாது. ஆக, இவ்விஷயத்தில் நமது பண்டிதருடைய ப்ரயாஸம் பழுதேயென்று முடிந்தது.

## ஸாத்யோபாய—ஆவச்யகத்வம்.

இதற்குமேல் ஸாத்யோபாயாவச்யகத்வமென மகுடமிட்டு எழுதியுள்ள விஷயங்கள் அத்தனையும் பல்பஜம் என்று நிரூபிக்கப்படுகிறது. * ச்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவதநர்த்தாய தத் து கர்ம ஸமாசரேத் * என்கிற ப்ரமாணம் ஸகலாசார்ய ஸம்மதம். * ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ: * தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ * யச் சாஸ்த்ரவிதி முத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:, ந ஸ ஸித்திமவாப்நோதி * இத்யாதி பகவத் வசனங்களை நிதியாகக் கொண்டிருக்கிறோம். ஆமுஷ்மிகச்ரேயஸ்ஸித்திக்காக ஸதாசார்ய ஸமாச்ரயண பூர்வகமாக மந்த்ரோபதேசம் பெற்று மந்த்ரார்த்தாநுஸந்தானமும் பண்ணி க்ருதக்ருத்யர்களாகிறோம். * ஸத்ஸங்காத் பவநிஸ்ஸ்ப்ருஹோ குருமுகாத் ஸ்ரீசம் ப்ரபத்யாத்மவாந் * என்று நடாதூரம்மாள் பணித்த கட்டளையிலே வர்த்தியாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. * ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாத் ஆசார்யவாந் பவேத் * என்ற சாஸ்த்ரார்த்தத்தில் உபப்லவமொன்றும் நிகழ்வதில்லை. * ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால்—மாநிலத்தீர்! தேனார் கமலத்திருமாமகள் கொழுநன்தானே வைகுந்தந்தரும் * [உபதேசரத்தினமாலை] என்கிற பாசுரத்தினால் தெரிவிக்கப்பட்டிருக்கிற மோக்ஷோபாயத்தைத்தான் வேதாந்த குருப்ரமுகர்களும் தெரிவித்திருக்கிறார்கள். மந்த்ரோபதேஷ்டாவான ஆசார்யனை த்ரோஹித்து வேறோராசார்யனைத் தேடியோடும்படி ஒரு சாஸ்த்ரமும் பேசிற்றில்லை. * யே ச வைஷ்ணவ ஸம்ச்ரயா: * என்கிற ப்ரமாணம் வலிதாக வோங்கி நிற்கிறது. "எம்பெருமானிடத்திலே ஸந்யாஸம் பண்ணின பின்பு" என்றும் "ந்யஸ்தபரனான பின்பு" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளில் யாருக்கு என்ன விவாதம்? ஒரு ஸதாசார்யனையடிபணிந்து * தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலேயொற்றுண்டு நின்றபோதே "நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" [நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி] என்று மார்பு நெறித்திருக்கவல்ல பரமைகாந்திகளுக்கு ஸந்யாஸமாகாமையுண்டோ?

நம்பிள்ளையீட்டில் "ஸர்வேச்வரனை யாச்ரயிக்கவேணும்" என்றுள்ள இடங்களையெல்லாமெடுத்து அடுக்கி, இப்படி நம்பிள்ளையருளிச்செய்கையாலே ஸர்வேச்வரனை ஆச்ரயித்தேயாகவேண்டுமென்றெழுதுகின்ற இப்பண்டிதரைப் பற்றி அந்தோ! நாம் என்ன நினைப்பது! * ந நமேயம் * என்றிருக்கிற ராவணனுடைய ஜ்ஞாதிகளுக்காகவா இவர் புத்தகமெழுதுகிறார்? இவர் என்ன அபூர்வார்த்தம் ஸாதிக்கிறாரோ தெரியவில்லையே. "ஜ்ஞாநாநந்தமயம் தேவம்" என்று சொல்லியிருக்கையாலே ஜ்ஞானமில்லாமல் எப்படி ஆனந்தமுண்டாகும்" என்று உபந்யஸிப்பார்க்கும் இப்பண்டிதர்க்கும் ஒரு வாசி காணவில்லையே. ஈட்டின் விமர்சமென்று பெயரிட்டு ஈடு முழுவதையுமே இவர் எழுதிக்கொண்டிருக்கலாமே. ஸர்வேச்வரனை ஆச்ரயிக்கக் கூடாதென்னும் கொள்கையுடையார் யாரேனுமுளரோ? பக்கம் 12ல் எழுதுகிறார்—"திருவிருத்தத்தில் ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்துத் தந்தருளவேணுமென்று எம்பெருமானை அர்த்திக்கிறார் என்று எழுதியிருப்பதால் சேதநன் புருஷார்த்தத்தை ப்ரார்த்திக்கவேணுமென்று வ்யக்தமாகிறது" என்று. இப்படிப்பட்ட பங்க்திகளாலேயே இவர் தம்சிறு புத்தகத்தை நிரப்பியுள்ளார். "ஸ்ரீஸீதாராமபாதாப்ஜாநி அபிவாத்ய" என்று ராமாயண ஸங்க்ரஹத்திலேயே சொல்லியிருப்பதனால் திவ்ய தம்பதிகளின் பாதாப்ஜங்களை அபிவாதநம் பண்ணவேணுமென்று வ்யக்தமாகிறது; * நிதாய ஹ்ருதி விச்வேசம் * என்று தர்க்க ஸங்க்ரஹம் தொடங்கும்போதே சொல்லியிருக்கையாலே விச்வேசனை ஹ்ருதயத்தில் வைக்கவேணுமென்று வ்யக்தமாகிறது; * முநித்ரயம் நமஸ்க்ருத்ய * என்று ஸித்தாந்த கௌமுதி தொடங்கும்போதே சொல்லியிருக்கையாலே முனித்ரய நமஸ்காரம் ஆவச்யகமென்று ஸ்பஷ்டமாகிறது— என்றிப்படி பலவும் இவர் எழுதி மிகப் பெரிய புத்தகமாகவுமாக்கலாமே.

இப்பண்டிதர் உபந்யாஸமென்றிட்டுப் பேசுகிற காலங்களில் தலை காலில்லாமல் எதையோ தொடங்கி எதையோ முடிப்பரென்று இவரோடொத்த வித்வான்கள் விளம்புவதுண்டு; அது இப்புத்தகத்தினால் நன்கு ப்ரதிஷ்டிதமாகிறது. எங்ஙனேயென்னில்; ஈடு முழுவதும் தமக்கு ஸாதகமென்று ஸாதிக்கத்தொடங்கினவிவர் (பக்கம் 13ல்) "வீடுமின் முற்றவுமென்கிற திருவாய்மொழியில்" என்றாரம்பித்து (பக்கம் 14ல்) "இது ஸ்ரீ பாஷ்யகாரருடைய நிர்வாஹத்துக்கும் ஆறாயிரப்படியில் பக்தியோகத்தை உபதேசிக்கிறார் என்றெழுதியிருப்பதற்கும் விருத்தமாக இருக்கிறதோடு ஈட்டிலேயே ஆழ்வார் உபாயபக்தியை உபதேசிப்பதாக மேல் பலவிடங்களில் அருளிச் செய்திருப்பதற்கும் விருத்தம்" என்பது முதலான பல வாக்யங்களினால் ஈட்டில் விருத்தமாகச் சொல்லப்பட்டிருப்பதாகவைத்து தூஷிக்கிறார். நாபியில்லாறியிருப்பது நன்கு வெளிவந்துவிட்டது. இவரும் இவருடைய ஸயூத்யர்களும் ஈட்டில் எவ்விதமான ப்ரதிபத்தியை வஹித்திருக்கிறார்களென்பதையுணர இதுவே பர்யாப்தமான நிதர்சனம். இனியிவர் "விருத்தம், விருத்தம் என்று நானெழுதியிருப்பதற்கு அப்படியன்று தாத்பரியம்" என்பரேல், விவக்ஷிதத்தை உள்ளபடி யெழுதத் தெரியாதவர் என்பதே தேறிநிற்கும். ஸபைகளில் அசடுபிசடாகப் பேசுவதோடு நிற்காமல் எழுதவும் துணிந்தது குண்டு தைர்யமே. ஒரு பெரிய க்ரந்தத்தை விமர்சம் செய்வதென்பது நிஷ்கல்மஷமான ஜ்ஞானமும் அற்புதமான விமர்ச சக்தியும் வாய்ந்த நிபுணர்களுக்கே ஸாத்யமாகும். ஒன்றிலும் தலஸ்பர்சியான ஞானமின்றிக்கே அக்கிலிபிக்கிலியாயிருக்குமிவர் ஈட்டை விமர்சிக்கிறேனென்று எழுவது மஹத்தான ஸாஹஸம். ஸ்வஸம்ப்ரதாயமென்ன, பரஸம்ப்ரதாயமென்ன? என்பதை அடியோடு அறியாமல் மனத்தில் தோன்றினதையெல்லாம் எழுதிக்கொண்டு போவதும், இதை வாசித்தும்பாராமல் (அல்லது) வாசித்துப் பார்த்தும் * பிம்போஷ்டம் பஹுமநுதே துரங்கவக்த்ர:* இத்யாதிக்ரமத்திலே அபிநந்தித்துச் சிலர் ப்ரகாசநம் செய்வதும் 'இவ்வகுப்பினர்க்குள்ள ஞானம் இவ்வளவேயோ'என்று ஸாமாந்யரும் நினைக்க ஹேதுவாம்.

பண்டிதர் (பக்கம் 25ல்) ஸாரமாக எழுதுகிறார்—"நன்கறிந்த புத்திமான்கள் கர்ம ஜ்ஞான பக்திப்ரபத்திகளை அவச்யம் அநுஷ்டிக்காமலிருக்கமாட்டார்கள்" என்று. இவர்க்கு நாம் ஸாரமாகவுணர்த்துகிறோம்; ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவில்—"நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:; உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாமபீ:" என்று தெள்ளமுதாகத் தந்தருளியிருக்கிறார். அவ்விடத்து ரக்ஷையில் வேதாந்தகுரு அசைக்கமுடியாத அற்புதமான நிர்ணயத்தை வெளியிட்டிருக்கிறார் "[illegible]" என்றும், "[illegible]" என்றும் "[illegible]" என்றும் "[illegible]" என்றும் ரக்ஷையிலே நிஸ்ஸந்தேஹமாகவுள்ளது. அந்த மஹாசார்யர் பணித்ததாகச்சொல்லப்படுகிற அடைக்கலப்பத்தில் "பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்" என்றுளது. கர்மஜ்ஞானபக்திகளில் தமக்குப் பதி கூடவில்லையென்கிறார். அவர்க்கு ஜ்ஞானத்திலோ சக்தியிலோ ஏதாவது குறை நினைக்கமுடியுமோ? முடியாது. அப்படிப்பட்டவர் * பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடவில்லையென்றால் இது எதனாலேயென்று விமர்சித்து விளக்குவதன்றோ விமர்சகர்க்கு அழகு.

ஸ்ரீ பாஷ்யத்தில் மூன்றாவது அத்யாயத்தில் நான்காவது பாதத்தில் ஒன்பதாவதான * [illegible] * என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில்— "[illegible]" இத்யாதௌ. [illegible]" என்றும், [illegible]—"[illegible]" என்றும் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு நிபுணமான விமர்சத்தை இவர் செய்யவல்லவரோ? வல்லரேல் அழகாகச்செய்து நற்புகழ் பெறுக

இப்பண்டிதர் கடைசி பக்கத்தில் எழுதுகிறார்—"ஸ்வாதிகாரா நுகுணமான ஸாத்யோபாயாநுஷ்டானமில்லாதவர்களுக்கு ஒருவித பலமும் ஸித்திக்காது" என்று. *பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமலென்று ஸாதித்தவருடைய அதிகாரம் எவ்வளவிற்றென்பதை இவர் தாமறிவரோ. உத்தமாதிகாரியான அவர் எவ்வளவு ஸாத்யோபாயங்களையனுஷ்டித்து எவ்விதமான பலன் ஸித்திக்கப்பெற்றாரென்பதை இப்பண்டிதர் நிரூபிக்கக் கடமைப்பட்டிருக்கிறார். * அகிஞ்சநோநந்யகதி: * என்று ஆகிஞ்சந்யத்தை முன்னிடுகிற ஆளவந்தார் தம்மிடம் எது எது இல்லாமையைக் கொண்டு தம்மை அகிஞ்சநராகச் சொல்லிக்கொள்கிறார்? ஸாத்யோபாயங்களை அநுஷ்டித்தாலொழியப் பலன்கிடைக்காதென்கிற இவருடைய கட்டளை ஆளவந்தார் வேதாந்தகுரு முதலானவர்க்குமுண்டோ? அல்லது அவர்களைத் தவிர்த்து அஸ்மதாதிகளுக்கு மட்டுமோ? ஆக இப்படிப்பட்ட விஷயங்களையெல்லாம் இவர் நன்றாக விமர்சித்து விளக்கியருளவேணும். இவரோ வாளாவிருந்து பரமபதித்துவிட்டார். (*)

# 10. நஞ்சீயரும் ஸ்ரீஸூக்தபாஷ்யமும்.

நந்தனஹு ஆனிமீ வெளிவந்த ந்ருஸிம்ஹப்ரியாவில் "நஞ்சீயரும் ஸ்ரீஸூக்த பாஷ்யமும்" என்று மகுடம்புனைந்த வியாஸம் நான்கு பக்கம்கொண்டு வெளிவந்திருக்கிறது. அத்தனையும் வீண் வாகாடம்பரமேயொழிய விஷயவிசாரம் ஸ்வல்பமுமில்லையே. நஞ்சீயரும் பெரியஜீயரும் ஒரே வ்யக்தியாக இருக்கட்டும். அதில் விசாரமில்லை. நஞ்சீயர் ஸ்ரீஸூக்த பாஷ்யமொன்று அருளிச் செய்தாரென்பதிலும் விவாதமில்லை. சிலவருஷங்களுக்கு முன்பு தேவநாகரலிபியில் அச்சிடப்பட்டு வெளிவந்த ஸ்ரீஸூக்த பாஷ்யம் நஞ்சீயருடையதன்று, வேறொரு பண்டிதருடையது என்கிற பரமார்த்தம் அசைக்க முடியாதபடி விளங்குகின்றது. கீர்த்தி தேஹத்தோடுவிளங்குகின்ற திருக்கோட்டியூர் ஸௌம்யநாராயணாசார்யஸ்வாமி மஹாப்ராமாணிகராகையாலே அவர் ஸ்ரீரங்கத்தில் தாயார் ஸந்நிதி முன்மண்டபத்தில் நடந்த ஸதஸ்ஸில் இது ஸம்பந்தமான விசாரத்தில் பலரறியச்சொன்னவார்த்தை—'இது நஞ்சீயருடையதாக இருக்க ஔசித்யமில்லையென்றே இப்போது என் மனம் நம்புகிறது' என்று. ஆனால் இது இப்போது பொய்யாக எழுதப்படுகிறதென்று சொல்லிவிடுவதில் ப்ரயாஸமில்லை. எந்த விஷயத்திற்கு அந்த ஸ்வாமி கட்டுப்பட்டு இந்த ஸ்ரீஸூக்தபாஷ்யம் நஞ்சீயருடையதன்று என்று இசைந்தாரோ அந்த விஷயத்தை இங்கே நிரூபிக்கிறோம். அவரைப்போன்ற ப்ராமாணிகர்கள் கைகூப்பவேண்டியது தவிர வேறுண்டோவென்று யாவரும் பார்க்கலாம்.

இப்போது அச்சாகியிருக்கிற ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் ப்ரயுஞ்ஜத்பி: இத்யாதி அபசப்தங்கள் நம்மால் காட்டப்பட்டிருப்பது பெரிய விஷயமன்று. அவை லேகப்ரமாதத்தால் வந்தவையென்று சொன்னாலும் சொல்லிவிடலாம். முக்கியமானதைக் கேளுங்கள். நஞ்சீயர் பட்டரை வெறும் ஆசாரியராகக் கொண்டவரல்லர். தாம் உத்தமாச்ரமியாயிருக்கச் செய்தேயும் க்ருஹஸ்தரான பட்டருக்கு ப்ரஹ்மரதமெழுந்தருளப்பண்ண கூடிவைத்தானவர் என்பதை யறியாதாரில்லை. அப்படிப்பட்ட நஞ்சீயர் தம்முடைய க்ரந்தத்தில் பட்டர் ஸ்ரீஸூக்தியை உதாஹரிக்க நேர்ந்தால் "ஸ்ரீபராசரபட்டார்யை ருக்தம்" என்று எழுதுவர்; "ஆசார்யபாதை ருக்தம்" "அஸ்மதாசார்யபாதை ரநுக்ருஹீதம்" என்று இவ்வண்ணமாகவன்றே எழுதுவர். பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ஆழ்வான் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டுகிறபோதும், நயினாராசார்யர் வேதாந்தமஹாகுரு ஸூக்திகளை யெடுத்துக்காட்டுகிறபோதும் இப்படியேயன்றோ எழுதியிருப்பது. நயினாராசார்யருடைய க்ரந்தத்தில் "வேதாந்தாசார்யை ருக்தம்" என்றோ "ஸ்ரீமதா வேங்கடநாதார்யேண ப்ரோக்தம்" என்றோ எழுதப்பட்டிருப்பதாகக் கண்டால் அதை நயினாராசார்யருடைய க்ருதியாக ப்ராமாணிகர்கள் ஒப்புக்கொள்வர்களா? ஸ்தோத்ரங்களோ தனியன்களோ எழுதினால் அவற்றில் [ஸ்வ௨ஜ நஸ ஜசுவாய] ஆசார்யநாம கீர்த்தனம் பண்ணுவது பொருந்தும். வசன ரூபமாக எழுதும் க்ரந்தங்களில் "தயா அாஹா அாய௨வாஜா:—கூஅாய௨வாஜாஸ்ரூ நஜஜஹா:" என்றிப்படியெழுதுவது தவிர வேறு விதமாக எழுதுவது முறையேயன்று. பெருத்த அபசாரமேயாகும். இவ்வபசாரத்திற்கு நஞ்சீயரையா ஆளாக்குவது. ஓரிடமன்றிக்கே பல விடங்களில் முறைதவறின பேச்சு முத்ரித ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் காண்கையாலே இது நஞ்சீயருடைய க்ருதியாக இருக்க ஔசித்யமில்லை. இந்த உபபாதனத்திற்குத்தான் திருக்கோட்டியூர் ஸ்வாமி பரவசராய் "இதற்குமேல் கோடி சொல்ல நெஞ்சால் நினைப்பதும் யுக்தமன்று; இது நஞ்சீயருடைய க்ருதியன்றுதான்" என்று ஸதஸ்ஸில் பலரறியச் சொல்லி எழுந்து சென்றார். அவரைப்பற்றி இப்போதென்ன? இதற்கு இப்போது ப்ராமாணிகமாக விடை கூறுவாருளரோ?

முத்ரித ஸ்ரீஸூக்தபாஷ்யத்திலுள்ள விஷயங்கள் தேனும் பாலுமமுதுமாக இருந்து உபய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் உபஜீவ்யமாக இருந்தாலுங்கூட, மேலே உபபாதிதமான தோஷத்தாலே அது நஞ்சீயருடைய க்ருதியாக இருக்கவே முடியாதென்பதுதான் ப்ராமாணிக ப்ராஜ்ஞஸித்தாந்தம். .... .... .... (*)

# இடையில் முக்கியமான விண்ணப்பம்.

நூறு நற்பொருள்களை வெளியிடுவதாக நாம் தொடங்கி யெழுதிவருகின்றோம். ஒன்று முதல் ஆறு வரை எழுதப்பட்டவை தற்காலம் ப்ரதிபக்ஷியாய் நிற்கின்ற திருமல தாதாசாரியருடைய பழைய பூர்வவாதங்களை நிரஸித்தவை. ஆதியிலிருந்து துர்வாதங்களையும் ஶுஷ்கவாதங்களையும் செய்து ஸந்தோஷப்படுவதே இவர்க்கு க்ஷுண்ணமானதென்று காட்டவே இந்த நிரூபணம். ஸ்ரீரங்கத்திலிருந்து நாம் நடத்திவருகிற அம்ருதலஹரீ பத்திரிகையைச் சிலரோ பலரோ பார்த்திருக்கமாட்டார்கள். நேற்று 15-5-61ல் வெளிவந்த 210 லக்கமுள்ள லஹரீபத்திரிகையை விமர்ஶகுஶலர்கள் யாவரும் அவசியம் வாசிக்கவேண்டும். கிடைக்கப் பெறாதவர்கள் நமக்கு எழுதினால் அந்த ஸஞ்சிகையை உடனே யனுப்புவோம். அதில் பூதிகந்த நிராஸஶதகம் என்று மகுடமிட்டு

“ஶ்ரீமத்தாதார்யஶம் ஸம்போத்யைவ ப்ரகாஶ்யதே விஷயாந்।
விஶேஷாம் ஶதம் நிர்ணீயாந் ஸதாஶ்ரிதாந் வேதவேதாந்தஸம்ப்ரதாயாந் ॥”

என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, இந்த தாதாசாரியர் நின்று பதில் சொல்லித் தீரவேண்டிய நூற்றுக்கு மேற்பட்ட விஷயங்களை யெழுதத்தொடங்கி (தற்காலம் வெளிவந்த ஸஞ்சிகையில்) இருபத்திரண்டு விஷயங்களை மிக விரிவாக வெளியிட்டிருக்கிறோம். அதே ஸஞ்சிகையில், திருக்குடந்தையில் வாழும் ந்யாய வேதாந்த வித்வான். திருப்பதி S. M. S. O. ஸபா தர்மாதிகாரி. [மத்வஸம்பிரதாயஸ்த மஹாவித்வான்] G. பூவராஹாசாருடைய ஸ்ரீமுகமும், T. நகர். ஸ்ரீ ராவ்ஸாஹிப், S ராகவையங்கார் ஸ்வாமியின் ஸ்ரீமுகமும் வெளிவந்திருக்கின்றன.

இதற்குமுந்தி ஸ்ரீராமாநுஜன் 147, 148 ல் பூதிகந்தி புஷ்பப்ரஶம்ஸநமும், பூதிகந்தி புஷ்பப்ரஹாரஸப்ததியும் வெளியிட்டிருக்கிறோம். ஆக இதுவரைக்குமே இந்த தாதாசார்யர் நூற்றுக்கு மேற்பட்ட விஷயங்களுக்கு நின்று விடை தரவேண்டியவராயிருக்கின்றார். ஒன்றுக்கும் வாய்திறவாதே கைபேராதே நிற்குமிவரைநோக்கி நாம் மேன்மேலும் எழுதிக்கொண்டு போவதில் என்னபலன்? என்று வெறுப்பே விளைகின்றது.

ராமராவணயுத்தத்தில் “ஸஶரஶ்சாபாணாபிஹதோ ஹ்ருதஶ்ச தத்ராயுத ஆவஞ்ச உத்ஸோஷு வீரஃ” என்னுமளவிலே இராவணன் நின்றபோது பெருமாள்செய்ததென்ன? மேன்மேலும் அம்புகளை எய்துகொண்டா இருந்தார்? இல்லையே. கச்சாநுஜாநாமி ரணார்திதஸ்த்வம் இத்யாதி அருள்மொழிகளன்றோ அவதரித்தன. அந்தரீதியிலே விட்டுத்தொலைக்க வேண்டியதுபோக, மேன்மேலும் எழுதிக்கொண்டுபோவது எதற்காக? என்று ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகள் பலர் ஸ்ரீ முகங்களெழுதியும் நேரிலும் நிஷேதிக்கின்றார்கள். லோகோபகாரங்களான மிகப்பெரிய காரியங்களிலே கைவைத்திருக்கின்ற நமக்குமிது ருசிக்கின்றது.

பிரபந்தசாரம் என்கிற நூல் நவீனக்ருதியேயொழிய தேசிகக்ருதியன்று என்பது ப்ரக்ருதத்தில் விஷயம். இதில் நாமெழுதியதென்ன? இவர் எழுதுவதென்ன? என்பதை விவேகிக

ளுக்கு ஸாரமாக வெடுத்துக்காட்டுகிறோமிங்கு. பிரபந்த ஸாரத்திலுள்ளதெல்லாம் பூர்வாசார்ய ஸம்ப்ரதாய விருத்தங்களாயும் மற்றும் பலவகை அஸாங்கத்யங்கள் மலிந்தவையாயுமிருப்பதால் அது தேசிகக்ருதியாக இருக்க ஔசித்யலேசமுமில்லையென்று நாம் நிரூபித்தோம். அத்தகைய நிரூபணங்களில், நாலாயிரத்தில் தனிப்பிரபந்தமாகிய திருப்பல்லாண்டைப் பெரியாழ்வார் திருமொழியோடு சேர்த்து ஏகப்பிரபந்தமாக்கியதும், திருமங்கையாழ்வாருடைய திவ்யப்பிரபந்தங்களில் சரமப்பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்தை மூன்றுவது பிரபந்தமாகக் குறிப்பிட்டதும் ஆகிய இவ்விரண்டு நிரூபணங்களும் சேர்ந்தவை. இவற்றுக்கு இவர்கள் எழுதவேண்டிய ப்ராமாணிகமான பதில் உண்டு. அதை இவர்கள் எழுதவில்லை. பிரபந்தசார பரிசீலனத்திலுள்ள அதை நாம் அடுத்தபடியாக ப்ரஸ்தாவிப்போம். இப்போது இந்ததாதாசாரியர் வீண் விஸ்தரம் செய்து எழுதியிருப்பதைக் களைகின்றோம்.

திருப்பல்லாண்டு தனிப்பிரபந்தமா? அல்லது பெரியாழ்வார் திருமொழியோடு சேர்ந்து ஏகப்பிரபந்தமா? என்கிற விசாரம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் தலைகாட்டக்கூடியதேயன்று. திருப்பாவை நாச்சியார் திருமொழிகளின் விஷயத்திலும், திருமாலை திருப்பள்ளியெழுச்சிகளின் விஷயத்திலும், நான்முகன்திருவந்தாதி திருச்சந்தவிருத்தங்களின் விஷயத்திலும் இங்ஙனேயொரு விசாரமுண்டாக ப்ரஸக்தியிருக்குமாயின் இந்த விசாரத்திற்கும் ப்ரஸக்தியிருக்கும். திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் முதற்பதிகமென்று பேசுபவன் ஓர் உன்மத்தனாயிருக்கவேணும்; அந்த உன்மத்த ப்ரலபிதங்களுக்கு விடையிறுப்பவன் அவனிலும் விஞ்சிய மஹோந்மத்தனாகவே யிருக்கவேண்டுமென்று இவ்வுண்மையை யுணர்த்தி நிற்போமிதில். தேசிகரஹஸ்யங்களில் குருபரம்பராஸாரமென்பது ரஹஸ்யத்ரயஸாரத்தின் முதலதிகாரமேயொழியத் தனிரஹஸ்ய நூலன்று என்று அச்சிட்டிருப்பார் பலருளர்; அவர்களோடு இவர்களையும் சேர்த்துவிட்டிடுதல் நன்று. பெரியாழ்வார் திருமொழி முடிவில் "விட்டுசித்தன்மனத்தே கோயில்கொண்ட கோவலனை" என்றவிடத்து வியாக்கியானத்தில் "திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும்............" இத்யாதி **பங்க்திகளிருக்கின்றனவாம்**; "திருப்பல்லாண்டினர்த்தத்தை நிகமிக்கிறார்" என்றும் **அஸக்ருத் இருக்கிறதாம்.** "இவற்றின் பொருளை சாஸ்த்ரபரிசயமில்லாதவர்கள் அறிவது அரிது" **என்கிறார்** இந்த மஹா மஹா சாஸ்த்ரஜ்ஞர். இப்படி எழுதித்தானே தன்னுடைய சாஸ்த்ர வைதேசிகத்வத்தை நிலைநிறுத்திக்கொள்ளவேணும். திருவாய்மொழியின் ஸகலவியாக்கியானங்களிலும் (வடகலைவியாக்கியானங்களுட்பட) *பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும் வர" என்கிற பங்க்தி பன்முறையும் வந்துள்ளது. இதனால் திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி ஆகிய இவையும் திருவாய்மொழியிற் சேர்ந்தவையே யென்று இவர் நிர்ணயிக்கத் தடையென்கொல்? இப்படி நிர்ணயிக்காவிடில் இவர் எப்படி சாஸ்த்ரஜ்ஞராவரோ?

அடுத்தபடியாக "இப்படி அசைக்கமுடியாத ஹேதுவைக்கொண்டு" இத்யாதி சுஷ்க வாக்ஜாலப்ரபஞ்சங்கள் திவ்யப்பிரபந்த ப்ரவேசலேசரஹிதர்களுடையனவென்கிற காரணமொன்றினாலேயே கண்ணெடுத்துக் காணவும்தகாதவை. ஏதோமறுக்கவொண்ணாத பல உபபத்திகளைத் தான்மொழிந்து விட்டதாகத் தானேயெண்ணிக்கொண்டு "எவரும் மறுக்கவொண்ணாதபடி உண்மை இவ்வாறு இருக்கின்றபடியால்" என்று எழுதிக்கொண்டு போகிறார். 'எவ்வாறிருக்கின்றபடியால்?' என்று கேட்டால் வாய்திறக்கவழியில்லை. 9–2–60ல் வெளிவந்திருக்கிற ப்ரபந்தசார பரிசீலனத்தில் (4, 5 பக்கங்களில்) கீழ்க்கண்ட பங்க்திகள்—

"திருப்பல்லாண்டையும் பெரியாழ்வார் திருமொழியையும் ஒரே பிரபந்தமாகக் கணக்குசெய்வது ஒவ்வாதுதான், ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் இப்படிச் சொல்லமுடியாதுதான். ஆனால் பிரபந்த சாரத்தில் இப்படிச் சொல்லியிருக்கிறதேயென்றால். சொல்லியிருக்கவில்லையென்றே திடமாகச் சொல்லலாம். அதில் "ஏரணி பல்லாண்டு முதற்பாட்டு நானூற்றெழுபத்தொன்றிரண்டும்" என்றிருப்பது பெரியாழ்வார் ஸாதித்த பாசுரங்கள் மொத்தம் இத்தனை என்று கணக்கிட்டமாத்திரமாகத்தேறுமே யொழிய வேறொன்றும் தேறாது. "ஆண்டாளருளிச்செய்த பாட்டுக்கள் 173" என்றொருவர் எழுதி வைத்திருந்தால் அதனால் எப்படி ஒரு அவத்யமும் வாராதோ, அப்படியே இங்குமென்க. திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் ஏகப்பிரபந்தமேயென்று தேசிகன் சாதித்துவிட்டதாக நாம் கொண்டிருக்கிற ஜடமான கொள்கையை விட்டொழித்துவிடலாம். தேசிகன் மேலேறிய அவத்யம் தீரவேண்டுவது முக்யமாதலால் அது தீர்ந்துவிட்டதென்று மகிழ்வோம் இதில் நம்முடைய எண்ணம் மட்டும் தவறு என்று முடிந்து நிற்கும். தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போன கதையாம். இனி திருமங்கையாழ்வாருடைய ஆறு திவ்யப்பிரபந்தங்களைப்பற்றித் தோன்றியுள்ள பிரபந்தசாரப் பாட்டில், பிரபந்தங்களின் பௌர்வாபர்யத்தை தேசிகன் விவக்ஷித்திருக்கிறாரென்று கொள்ளவேண்டிய அவசியமில்லை. கலியனருளிய பிரபந்தங்கள் இவை யிவையென்று நிர்தேசிப்பது மட்டுமே தேசிகனுக்கு விவக்ஷிதமென்று கொள்வோம். திருநெடுந்தாண்டகத்தை விட்டுப் பெரிய திருமடலைச் சரமப் பிரபந்தமாக்குவதிலுள்ள அசட்டுத்தனம் நம்மோடு நிற்கட்டும். தேசிகன் மீது இது எருதபடி செய்துவிடலாம். செய்து விட்டோம். இங்கும் தலைக்குவந்தது தலைப்பாகையோடு போனதாகக் கொள்ளலாம்."

இது மாம்பலம் வரதராஜர் எழுதியதாயினும் ஓரிடத்தில் நாம் உபந்யஸித்ததைக் கேட்டிருந்தே அவர் இது மிகப் பொருத்தமென்று கருதி ஸ்வமதமாக எழுதிவெளியிட்டார். இந்த தாதாசாரியர்போல்வார் இந்த வழியைப்பற்றிக் கொண்டால் திருப்பல்லாண்டையும் திருநெடுந்தாண்டகத்தையும் பற்றினவரையில் பிரபந்தசாரம் பிழைத்தது என்று ஒருவாறு தேறலாம். திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தை முன்னமே பாடி முடித்துவிட்டு, மடலூர்ந்து முடிந்தார் என்று சொல்லுவது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உற்றதன்று. மடலூர்வதென்பது பர்யாயமாக எம்பெருமானோடு மநஸ்தாபப்படுவது. மநஸ்தாபத்தோடு ஆழ்வார் தலைக்கட்டினார் என்பது எந்த கோஷ்டியிலும் ஏற்கத்தக்கதன்று.

**முடிவில் பிரபலமான இந்த விஷயத்தோடு தற்காலம் நிற்கிறேன்.**
**இதற்கு பதில் வெளிவந்தபிறகு மற்றதாகும்.**

ஆளவந்தாரருளிச்செய்த க்ரந்தங்களில் ஸ்தோத்ரரத்நம், சதுச்ச்லோகி என்கிற இரண்டில் எது முற்பட்டது? எம்பெருமானாருளிச்செய்த ஸ்ரீ ஸாஷ்யாதிகளில் எது முற்பட்டது? என்கிற இவ்விரண்டு விசாரங்களைச்செய்து முடிவுகாண்போம்: தேசிகனருளிச்செய்த பதினேழாவது ரஹஸ்யமான குருபரம்பரா ஸாரத்தில்,

> "ஆளவந்தார் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் ஆகம ப்ராமாண்யமும் புருஷ
> நிர்ணயமும், ஆத்மஸித்தி ஈச்வரஸித்தி ஸம்வித்ஸித்தி யென்கிற ஸித்தித்ரய
> மும் கீதார்த்த ஸங்க்ரஹமும் ஸ்தோத்ரமும் சதுச்ச்லோகியும் ஆக எட்டு"

என்றருளிச் செய்யப்பட்டிருப்பதால் ஸ்தோத்ரரத்னம் முற்பட்டதென்றும் சதுச்ச்லோகி அதற்குப் பிற்பட்டதென்றும் காட்டப்பட்டதாகிறது. இது தேசிக ஸ்ரீஸூக்திக்கே விருத்தமென்பதை உடனே ஸ்பஷ்டமாகக் காட்டுகிறோம். (அது அடுத்தபக்கத்தில்.)

அந்த குருபரம்பரா ஸாரத்திலேயே எம்பெருமானருளிச்செய்த பிரபந்தங்களின் அடைவைக் காட்டியருளுமிடத்து

"ஸ்ரீபாஷ்யம் தீபம் ஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம் ஸ்ரீகீதாபாஷ்யம்
சிறிய கத்யம் பெரிய கத்யம் ஸ்ரீ வைகுண்ட கத்யம் நித்யம் ஆக ஒன்பது"

என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இதுவும் ஸ்ரீபாஷ்ய ஸூக்திக்கு அத்யந்த விருத்தமென்பதை மூதலிக்கிறேன்.

1. ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி. குருபரம்பரா ஸாரத்திலிருந்து காட்டின ஸ்ரீஸூக்தியின்படி ஸ்தோத்ர ரத்நத்தை முந்தியதாகவும் சதுச்ச்லோகியைப் பிந்தியதாகவும் தேசிகன் திருவுள்ளம் பற்றியிருக்கிறாரென்று கொள்ளவேண்டியதாகிறது. ஆனால் இது நிலை நிற்பதன்று. தேசிகன்தாமே சதுச்ச்லோகீ பாஷ்யத்தின் முடிவில் "[illegible]" என்றருளிச் செய்திருக்கிறார். இதனால் ஸ்தோத்ர ரத்நம் பிற்பட்டதென்பது நிஸ்ஸந்தேஹமாயுள்ளது. இந்த விரோதத்தை விவேகிகள் பரிஹரித்தாக வேண்டும். குருபரம்பரா ஸாரத்தில் ஸாதித்தது தவறு என்கிறீர்களா? [illegible] ஸாதித்தது தவறா?

2. எம்பெருமானார் ஸ்ரீஸூக்தி. குருபரம்பராஸாரத்திலிருந்து காட்டின ஸ்ரீஸூக்தியின்படி ஸ்வாமியின் திவ்யக்ரந்தங்களுள் ஸ்ரீபாஷ்யமே முற்பட்டதென்று தேசிகன் திருவுள்ளம்பற்றியிருப்பதாகக் கொள்ளவேண்டியதாகிறது. இது ஸ்ரீபாஷ்யவிருத்தமேயாகும். எங்ஙனே யென்னில்; ஸ்ரீபாஷ்யத்தில் மஹாஸித்தாந்தத்தில் நிவ்ருத்த்யநுபபத்தியை நிரூபித்துக்கொண்டு போம்போது "[illegible]" [illegible] ணியில் "[illegible]" [அயமர்த்தோ வேதார்த்தஸங்க்ரஹே ஸமர்த்தித:] என்று ஸாதிக்கப்பட்டிருக்கிறது. இதனால் ஸ்ரீபாஷ்யத்திற்கு முன்னமே வேதார்த்த ஸங்க்ரஹமருளிச்செய்து தலைக்கட்டினதாக ஸ்வாமிதாமே வெளியிட்டருளினதாயிற்று. *[illegible]* என்றும் *[illegible]* என்றும் ஸாதித்த ஸ்வாமி இந்த பங்க்தியை மறந்திருக்க ப்ரஸக்தியில்லையே. ஸ்ரீபாஷ்யஸூக்திவிருத்தமாக ஸ்ரீபாஷ்யத்தை [illegible] தேசிகன் எப்படி ஸாதித்தாரென்று கேட்கிறோம். தவிர, [illegible] யத்தில் [illegible] முற்பட்டதன்று, ஸ்ரீரங்க கத்யமே முற்பட்டது என்று தெரிவிக்கிற குருபரம்பராஸார ஸூக்தியை எவ்விதமாக நிர்வஹிப்பது? என்கிறகேள்விக்கும் பதில் சொல்லவேணும். ஸ்ரீரங்ககத்யமே முற்பட்டதென்னும் பேச்சை ஒரு உன்மத்தனுவது ஒப்புக்கொள்வனா? [illegible] விருத்தமுமன்றோவிது:

ஆக, ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி பௌர்வாபர்யத்திலும் எம்பெருமானார் ஸ்ரீஸூக்தி பௌர்வாபர்யத்திலும் இங்ஙனே நாம் காட்டிய முரண்பாட்டைப் பரிஹரித்தானபிறகு இவர்களுக்குவாத கோஷ்டியில் அந்வயயோக்யதையுள்ளதென்றுசொல்லி நிற்கிறோமிப்போது.

ப். அண்ணங்கராசாரியர்.

---